உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-31
துன்முகி-வைகாசி - 4
17-5-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## முல்லை

தலைவன் வருவதாகக் கூறிச்சென்ற கார்ப்பருவங் கண்டு ஆற்றாளாகிய தலைவியைத் தோழி மழைமேல் வைத்துப் பருவமறுத்தது.

சிறுவீ முல்லைத் தேங்கமழ் பசுவீ, பொறிவரி நன்மான் புகர்முகங் கடுப்பத், தண்புத லணிபெற மலர வண்பெயற், கார்வரு பருவ மென்ற னர் மன்னினிப், பேரஞ ருள்ள நடுங்கக் காணிய, நண்பின் மையிற் பண்பில பயிற்றும், போய்பிடி யதிர்குரல் வாய்சேத் தாலு, மின்மயின் மடக்கணம் போல, நினைமருள் வேனே வாழியர் மழையே 248

:-காசிபன்கீரனார்

மேகமே! நமது காதலர் வினைவயிற் பிரிந்து செல்கின்றபோது, சிறிய பூவையுடைய முல்லையினது தேன்மணம் வீசுகின்ற பசிய மலரெல்லாம், நல்ல யானையினது புள்ளிகளையும் வரிகளையுமுடைய புகரமைந்த முகத்தைப் போலத் தண்ணிய புதர்கள் அழகு பொருந்தும்படி மலர, மழைப்பெயலையுடைய கார்ப்பருவம், யாம் வருகின்ற பருவமென்று கூறிச்சென்றார். இப்பொழுது இவள்பால் அன்பில்லாமையால் பண்பில்லாதவற்றை மேற்கொள்ளுகின்ற பொய்மையாக இடிக்கும் அதிர்ச்சியையுடைய உனதுமுழக்கத்தை மெய்ம்மையாகக் கொண்டு ஆரவாரிக்கும் மயிலினமாகிய அறிவில்லாத கூட்டம்போல உன்னைக்கண்டவுடன் யானும் மயங்குவேனோ? நீ நீடுவாழ்வாயாக.

பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

அன்னதோரு காரணத்தாற் சவுந்தரிய பாண்டியனேன் ருகி யன்ன,
தேன்னவர்கோன் கவுணியர்கோன் றிருநோக்காற் பரிசத்தாற் றிகழும்
வாக்காற், போன்னடிதாழ்ந் தைந்தேழுத்து முபதேசப் பேறடைந்து
போலிவால் வஞ்சந், துன்னமணர் நேறியிகழ்ந்து தோல்வேத நேறிய
டைந்து தூய ஞனன். :-திருவிளையாடற் புராணம் 3173

உரை:- 'அன்னது ஒரு காரணத்தால் - மேனுள் உள்ள கூனுேடு வெப்புநோயும் ஒழிந்து பழுதறக் கடைந்த விண்மணியெனப் பாண்டியன் விளங்கிய காரணத்தினுல். சவுந்தர பாண்டியனென்று ஆகி-கூன்பாண்டியனென்னும் பெயரொழிந்து சவுந்தரபாண்டியனென்னும் பெயருடையவனுகி, அன்ன தென்னவர்கோன்-அந்தத் தென்னுட்டவர்க்கரசன், கவுணியர்கோன் - கவுணியர் குலத்தலைவராகிய திருஞான சம்பந்தப் பிள்ளையாரது, திருநோக்கால் - அருட்பார்வையாலும், பரிசத்தால்-தீண்டுதலாலும், திகழும் வாக்கால் - விளக்கத்தையுடைய திருமொழியாலும், ஐந்தெழுத்தும் உபதேசப் பேறு அடைந்து - திருவைந்தெழுத்தை உபதேசிக்கப் பெற்ற பேற்றை அடைந்து, பொலிவால் - அவ்விளக்கத்தினுல், பொன் அடி தாழ்ந்து-அவருடைய செம்பொன்னை யனைய திருவடிகளில் விழுந்து வணங்கி, வஞ்சம் துன்னு அமணர் நெறி இகழ்ந்து-வஞ்சனை நிரம்பிய சமணர்களது புன்னெறியை இகழ்ந்து, தொல் வேதநெறி அடைந்து - பழய வேத நெறியொழுக்கத்தை மேற்கொண்டு தூயன் ஆனுன் - தூய்மையுடையவனுனுன்' என்பதாகும்.

ஞானசம்பந்தப் பெருமானது முழு வரலாற்றையும், சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர்புராணத்தில் 1256 செய்யுட்களில் அழகுபடக் கூறியுள்ளார். அவரது பாண்டிநாட்டு நிகழ்ச்சி

களைமட்டும் விரித்துப் பரஞ்சோதிமுனிவர் தமது திருவிளையாடற்புராணத்தில் மூன்று படலங்களில் 205 செய்யுட்களில் உரைத்துள்ளார். அவற்றுள் முதலிரண்டு படலங்களில் உள்ள 150 பாடல்களும் பாண்டிநாட்டிற் சமணிருளொதுக்கிச் சைவ விளக்கம் செய்த நிகழ்ச்சியைக் கூறுகின்றன. மூன்ருவதாகிய வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த படலத்தில், சோழ நாட்டு இளங்காதலர் திருமணத்தின் பொருட்டு அந்நாட்டிலிருந்த வன்னியையும் கிணற்றையும் இலிங்கத்தையும் பாண்டிநாட்டிற்கு அழைத்த வரலாறு பேசப்பெற்றுள்ளது.

பாண்டி நாட்டையாண்ட மன்னர்களுள் கூன்பாண்டியன் தோள்வலியும், படைவலியும் மிகுந்தவனாய் மாற்றரசரை அடக்கி அடிப்படுத்தி உலகம் புகழ வாழ்ந்தான் சேரனும் சோழனும் அவனுக்குத் திறை செலுத்தி அவன் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடந்துவந்தார்கள். இவன் நெல்வேலியில் நிகழ்த்திய போர், இவனுக்குப் பெருவெற்றியைத் தந்தது. 'நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன்' என்பது திருத்தொண்டத்தொகை.

கூன்பாண்டியனது பேராண்மை, வளவர்கோனை வசப்படுத்தியது. அவன் பெற்ற மங்கை நல்லார் மானியார் என்னுந் திருப்பெயரையுடையவர். உலகமெலாம் மின்னிக் கோதில் புகழொளியால் விளக்கும் சைவ மணிவிளக்கு. கன்னிக்கோல மங்கையருக்கரசி. அப்பெருமாட்டிக்கேற்ற கணவன், கூன்பாண்டியனே எனத் தெளிந்த வளவர்கோன், அளவறு நிதியமும் செம்பொற் கலிங்கமும் விளைநிலமனைய ஆயவெள்ளமும் பிறவும் தென்னன் உளமகிழ் சிறப்ப வரிசையால் உதவிக்குலச் சிறை யென்னுங் கல்வி கேள்வி மிக்க செம்மலையும் கொடுத்து மானியாரை மணம்புரிந்து கொடுத்தான்.

குலச்சிறையாரது குணநலன், கேள்வித் தலைமை, கூர்த்தமதியாதியன, அவரைப் பாண்டிநாட்டு முதலமைச்சராயிருந்து பணியாற்றும்படி செய்தன. அமைச்சரது அறிவாற்றல் வலிமையால் நாடு நலம்பெறப் புரந்துவந்த பாண்டியன் வல்வினைவலியால் நான்மறையொழுக்கம் நீத்து நக்கர் புன்னெறியொழுக்கத்தைக் கடைப்

பிடித்தான். 'மன்னனெவ்வழி மன்னுயிரவ்வழி' யல்லவா? தன்னிநாடு அமணர் தம்மாற் கட்டழிந்தது.

மானியாரும் மந்திரியாரும் வருந்திச் சொக்கேசப்பெருமான் சந்நிதியிற் றாழ்ந்து, நன்றியில் நெறியில் அழுந்திய நாடும் நற்றமிழ் வேந்தனும் உய்யும் உபாயத்தை அருள வேண்டுமென்று பணிந்தனர். அங்கே வந்திருந்த மறையவரொருவராற் சிரபுரப் பிள்ளையின் திறத்தையறிந்து அவரை வரவழைத்து நாட்டை நல்வழிப்படுத்த நாட்டங்கொண்டார்கள்.

வேதவனத்திலிருந்த பிள்ளையாருக்கு வேண்டுகோள் விடுத்தார்கள். பிள்ளையார் மதுரைப்பதிக்கு எழுந்தருளினர். அவரும் அடியார்களும் தங்கியிருந்த திருமடத்தில் அமணர்கள் கொளுவிய தீ வெப்புநோயாகி அரசனைச்சுட்டது அமணர்களால் அகற்ற முடியாத அவ் வெப்புநோய் ஆளுடைய பிள்ளையாரது திருநீற்றினல் அகன்றது.

சம்பந்தருக்கும் சமணர்களுக்கும் நிகழ்ந்த அனல் வாதம் புனல்வாதங்களில், சம்பந்தர் வெற்றி கண்டார். சமணர்கள் வாக்குறுதிப்படி கழுவேறினர்கள். பாண்டி நாட்டில் வேத நெறி தழைத்தோங்கி மிகுசைவத்துறை விளக்கம்பெற்றது.

பிள்ளையாரது திருக்கரங்களால் நீறு பூசும் பேறுபெற்ற பாண்டியன் புதிதாகவந்த வெப்புநோயோடு பழயதாயிருந்த கூனும் நீங்கப்பெற்றான். கூன்பாண்டியனென்ற அவனது பெயர் நெடுமாறனென மாறியதோடு சவுந்தரபாண்டியனாகவும் அவன் ஆயினான். இது, ஆண்டவனிடத்திலும் அவனருள் பெற்ற அடியார்களிடத்திலும் நாம் எண்ணி வேண்டுவன மட்டுமன்றி வேண்டிக்கொள்ளாதபிறநலங்களும்பெறலாமென்பதை அறிவுறுத்துகிறதல்லவா?

ஆசாரியன் சீடனை ஆட்கொள்ளுவதற்குச் செய்யும் தீட்சை வகைகளைச் சிவஞான சித்தியார் 'அருட்குருவை வழிபடவே யவனிவன்றானாயே, இரங்கி வாரணமாமை மீனண்டஞ் சினையை, இயல்பினொடு பரிசித்து நினைந்தும் பார்த்தும் பரிந்திவைதா மாக்குமா போற் சிவமே யாக்கும், பரிசித்துஞ் சிந்தித்தும்பார்த்துந்தானே' என்று உணர்த்துகின்றது.

தென்னவர்கோனைக்கவுணியர்கோன் திருநோக்கஞ் செய்து

திருநீறுதடவி மயக்கமறுப்பும் திருவைந்தெழுத்தை உபதேசித்ததால், அவனுக்கு மூவகைத் தீட்சைகளும் முற்றுப்பெற்றன. இங்கே சட்சுதீட்சை திருநோக்கம் என்று குறிக்கப் பெற்றது. திரு என்பது, செல்வமனைத்தையும் குறிக்கும் பொதுச்சொல்லாகப் பயன்படுத்தப் பெறுமேனும், அவ்வெல்லாச் செல்வங்களுக்கும் தாயகமாக இருக்கிற முத்தித் திருவையே அது குறிக்குமென்று ஆன்றோர் கூறுவர்.

முத்தித்திருவை 'மோக்ஷஸ்ரீ' என்று வடமொழியிற் சொல்லுவர் ஆசிரியனது அருட்பார்வை முத்தித்திருவை வழங்குவதாதலின், அது இங்கே திருநோக்கம் என்று சிறப்பிக்கப்பெற்றது. மந்திரச்சொற்களும் மற்றைச் சொற்களும் ஒலிவடிவம் வரிவடிவம் முதலியவற்றால் ஒன்று போலக் காணப்படினும், பயன் தரும் வகையில் ஒன்றற்கொன்று தொடர்புடையனவல்ல என்பதைத் 'தெருட்டும் வாக்கால்' என்ற சொற்றொடரில் வைத்து ஆசிரியர் புலப்படுத்தினர்.

ஆசாரியனது அருட்குறிப்பினாலன்றி மெய்யுணர்வு வாராதென்பதையும், அது பெற்றபடியினாலேயே நெடுமாறன் உய்தி பெற்றானென்பதையும் இறுதிவரியால் நாமறிகின்றோம்.

## சென்னையுடன் சேர்ந்த திரு-கோச்சி கோயில்கள்

திருவனந்தபுரம் மே 8-

மத்திய அரசாங்கத்தின்பிரதிநிதிகளும் சென்னை திரு-கொச்சி அரசாங்கங்களின்பிரதிநிதிகளும் சென்னையுடன் இணைக்கப்பட்ட திரு-கொச்சி தமிழ் தாலுகாக்களில் உள்ள கோயில்களின் செலவுக்கு ஆண்டுதோறும் ரூ 13.5 லட்சம் ஒதுக்கப்படவேண்டும் என்று தீர்மானம் செய்தனர்.

இந்தத் தொகையானது சென்னைநிலவரியிலிருந்தும்மேற்கண்ட கோயில்களை நிருவாகம் செய்வதற்குச் சட்டப்படி நியமிக்கப்பட்ட குழுவிடமிருந்தும் வசூலிக்கப்படும்.

பத்திரிகைநிருபர் கூட்டத்தில் அரசப் பிரமுகரின் ஆலோசகர் திரு பி எஸ் ராவ் இதைத் தெரிவித்தார்.

கடந்த மூன்று ஆண்டுகளாக இந்தக் கோயில்களில் செலவான தொகையிலிருந்து இது கணக்கிடப்பட்டிருக்கிறது என்றும் அவர் கூறினர்

சென்னையுடன் இணைக்கப்பட்ட திரு-கொச்சிப் பகுதியில் 200கோயில்கள் இருக்கின்றன.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

இம்மானங்கெட்ட செயல் வேறெச் சமயத்தாரிடமு மில்லையே. நிலைகெட்ட அச்சைவரை நினைக்கும்போது நெஞ்சு பொறுக்குதில்லை. 'சுத்த சன்மார்க்கத்துக்கு முக்கிய தடையாகிய சமயம், மதம் முதலிய மார்க்கங்களை முற்றும் பற்றறக் கைவிட்டவர்களும்....ஆகிய இவர்கள்தான், சுத்த சன்மார்க்கத்துக்கு உரியவர்கள் ஆவார்கள்' என்றார் இராமலிங்கர். அதன்படி அச்சைவர் சைவசமயத்தைப் பற்றறக் கைவிட்டு அச்சுத்த சன்மார்க்கத்துக்குப் போய்த் தொலையலாமே. அப்படிக் கைவிட்டவர்தான் அச்சன்மார்க்க சங்கத்திற்சேர்தற்கு யோக்கியதையுடையவரென இராமலிங்கரே சொல்லிவிட்டார். அங்ஙனமாகச், சைவரா யிருந்து கொண்டே அவரைச் சுற்றுபவர் அவரையும் ஏய்க்கிறவராவார். சைவ சமூகத்துக்கு Black sheep in foldஎன்பவர் அவர்தான். இன்றேல் ஐயோ! சைவசமூகத்துக்குஅவர் 'யாரோ அறியேன் பராபரமே'.

'சூரியனுக்குக்கலை16...சந்திரனுக்குக் கலை16... அக்கினிக்குக் கலை64...ஆகக் கலை96. மேற்படி 96 கலையே 96 தத்துவமாய்ப் பிண்டவடிவாயிற்று. அக்கினிக் கலை64-ன் குணங்கள் சைவத்தில் 64 திருவிளையாடல்களாகவும், உண்மை அடியார்கள் 63 அதீதம் ஒன்று ஆகவும் வழங்குகின்றன. சந்திரகலை 12-மே வைஷ்ணவ பாத்தில் துவாதச ஆழ்வார்களாக வழங்குகின்றன. மற்ற 20 கலையும் கௌமாரம், பாசுபதம், மகாவிரதம், சாத்தேயம், காணபத்தியம்,காபாலம் சௌரம், மகம்மதீயம், பௌத்தம், கிருஸ்துவம் முதலிய சமயங்களில் வழங்குகின்றன. இவற்றின் அனுபவங்களைக் குருமுகத்தில் அறிக' என்றார் இராமலிங்கர். சூரியனும், சந்திரனும், அக்கினியும் சடங்கள். ஆகலின் அவற்றின் கலைகளுஞ் சடங்களே. அக்கலைகளே திருவிளையாடல்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்றால் அதைக் கேட்டபிறகு அவரைச் சுற்றிக் கொண்டிருக்கிற சைவர் சாபவயத்தராய்த்தா

னிருக்கவேண்டும். 20 கலைகளும் பாசுபத முதல் கிருஸ்துவம்வரை யுள்ள சமயங்களில் வழங்கு கின்றன என்றால் எப்படிவழங்கு கின்றன என்பது தெரியவில்லை. அதைத் தெரிவிக்கக் குருவேண் டாம். நவீனரே போதும். அவர் தெரிவிப்பாரா? தம்மையும் ஒரு கலையென இராமலிங்கர் சொல்லவில்லை. ஒரு கலையை அதீதமென்றாரவர். அதுதான் அவரோ?

இதுவரை இராமலிங்கரைப் பற்றி நான் மிகச் சுருக்கிச் சொன்னேன். அவரைச் சைவ சமுகம் அறிந்திருக்க வேண்டும், அதற்கு அவ்வளவு போதுமென் பது என் கருத்து. சம்பந்தாதி சைவத் தலைவருக்கு மாலையிட்டு அவரருட் பாடல்களை வரம்பழி யாமற் போற்றி வாழ்கிற அச் சமுகத்தின் முன் இராமலிங்க ருஞ் சைவர்தான், அவர்பாடல்க ளுஞ் சைவப் பாடல்கள்தான் என நவீனர் சைவ வேடத்தில் மறைந்துகொண்டு பலமான பிர சாரஞ் செய்து எத்தனையோ சைவரைச் சைவ நெறியிற் பிறழ்ந்து நடக்குமாறு செய்து வருகின்றனர். அச்செயல் 'நீங் கள்...மற்றவர்களையும் நமது ஒழுக்கத்துக்கு வரும்படி எவ் வித தந்திரமாவது செய்து நம் மவர்களாக்கிக்கொள்ள வேண்டி யது' என இராமலிங்கர் பிறப் பித்த ஆணைவழித் தாகும். மெய்யான சமயத்தை நேர்மை யாகப் பிரசாரஞ் செய்பவர் தந் திரத்தைக் கையாளுவா னேன்? தந்திரப் பிரயோகத்தோடு கூடிய சமயப் பிரசாரத்தால்அச் சமயம் சத்துக்கெட்டதென்றே துணியப்படும். 'தந்திரமாவது செய்து' என்று சொல்லாமல் 'எவ்வித தந்திரமாவது செய்து' என்று சொன்னாரே இராமலிங் கர். அதனால் வரன்முறையற்ற தந்திரத்துக்கும் அவரனுமதி யுண்டெனத் தெரிகிறது. அவ ருக் காட்பட்டுப் பல சைவர் தம் சமயத்துக்கு உதவாமற்போகின் றனர். அப்படிப் போக்குவதில் பெரும்பங்கு நவீனருடையதே. அவர் சைவத்தை வளர்க்கத் தோன்றியிருக்கின்றனராம், விந்தை.

,சிறு தெய்வ வணக்கம்' (11, 18-12-55 தமிழ்நாடு)என் றொரு கட்டுரை யெழுதியிருக்கி றார் நவீனர். தொல்காப்பியர் காலமுதலே தமிழர் பல சிறு தெய்வங்களை வணங்கி வந்த னர்

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணே



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி வைகாசி - 4

# சிவஞான பாலயர்

திருக்கைலாய மலையிற் கண நாதராயிருந்த சங்குகன்னரேன்பார், சிவபெருமானது கட்டளைப்படி பூவுலகத்தில் கீழைச்சமுத்திரத் திலே மானிட வடிவங் கோண்டு தோன்றி அச்சமுத்திர தீரத்தில் மயூராசலத்திற்கு அருகில் ஒரு ஆச் சிரமங்கண்டு சித்துக்கள் பல விளங்கச் சிவயோக சமாதியில் எழுந்தருளியிருந்தார். இளம் வய திற் சித்திகளில் வல்லவராயிருந்த இவரைப் பால சித்தரேன்று அனே வரும் வழங்கினர்.

பாலசித்தர், முருகக் கடவுளே நேரிற்கண்டு அவரோடு மயிலம் என்று வழங்குகின்ற மயூராசலத் தில் இருந்துகோண்டு தம்மை வந் தடைந்தஅடியவர்களுக்கு ஞானே பதேசம் புரிந்து வந்தார். பாலசித் தர் திருவுளப்பாங்கின்படி நாடோ றும் அவரது திருவமுதுக்குச் சது ரக்கள்ளிப் பால்கறந்து கோடுத்துக் கோண்டிருந்த அம்மவை யென்ப வள், ஒருநாளில் அவர் கருணே கூர்ந்தளித்த பாற்பிரசாதசேடத்தை யுண்டு, அதனுல்ஓர்ஆண்மகவைப் பெற்ருள். அப்பிள்ளேயை முருகக் கடவுள் அழைத்துச் சந்நியாச ஆச்சிரமந் தந்து ஆசாரியாபிடேக மும் ஞானேபதேசமும் புரிந்து 'நீ பாலே உணவாகக்கோண்டு சீட பரம்பரையோடு சிவஞான தேசிக னேன் வாழ்வாயாக' என அநுக் கிரகித்தார்.

பாலசித்தருக்குப் பிறகு சிவ ஞானதேசிகர் ஆதீனத் தலேவராகி அருளுபதேசம் புரிந்து வந்தார். இவர் செய்த அற்புதச் செயல்கள் பலவேன்று இவரது வரலாறு

கூறுகின்றது. விடந்தீண்டி யிறந்தவனை எழுப்பியது, சூலைநோயால் வருந்திய நவாபுவின் மனைவிக்கு அந்நோயை நீக்கியது, மணலைச் சர்க்கரையாக்கியது, முதிர்ந்த பெற்றோர்க்குப் புத்திரப்பேறு நல்கியது, கூன் குருடு முதலிய உறுப்புக் குறைகளையும் வெப்பு, காசம் முதலிய கொடிய பிணிகளையும் பேய் பிசாசுகளையும் அகற்றியது முதலிய பல வியத்தகு செயல்கள் இவரால் நிகழ்த்தப்பெற்றன.

சிவப்பிரகாச சுவாமிகளை ஆட்கொண்ட ஞானகுருவாகிய இப்பெரியார் பரிபக்குவராகிய வேறொரு மாணவருக்கு ஆசாரியாபிடேகம் ஞானோபதேசம் புரிந்து சிவலிங்க ஐக்கியமான நாள், வைகாசிவிசாக (**23-5-56**) நாளாகும்

## திருவள்ளுவர்

தமிழ் நூலாசிரியர் பலருள்ளும் தலைசிறந்தவராக உலகமக்களால் மதிக்கப்பெறுபவர் திருவள்ளுவரே யாவார் திருவள்ளுவர் காலத்திற்குப்பிறகு தோன்றிய எல்லாத் தமிழ்ப்புலவர்களும் அவருடைய குறளையேனும் குறட் கருத்தையேனும் எடுத்தாண்டே, தமது செய்யுள்நடை உரைநடை நூல்களைச் சிறப்புடையனவாகச் செய்துள்ளார்கள்.

திருக்குறளிற் சிலவற்றைப் பொறுக்கியெடுத்து அவற்றைப்பின்னிரண்டடிகளாயமைத்து வெண்பாக்களானியன்ற நூல்கள் பலவுள்ளன. அவை சிவ சிவ வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா, திருக்குறட் குமரேச வெண்பா, தினகரவெண்பா, வடமலை வெண்பா, இரங்கேச வெண்பா, திருமலை வெண்பா, பெரியபுராணச் சரித்திர வெண்பா, முதலியனவாகும்.

**1794**ம் ஆண்டு முதல் **1935**ம் ஆண்டுவரை எடுக்கப்பெற்றகணக்கில், ஆங்கிலத்திலும் தமிழிலும் முழுவதும்-திரட்டியெடுக்கப் பெற்றவையுமாகத் திருக்குறட் பதிப்புகள் தொண்ணூறு வரை வெளிவந்துள்ளனவென்று தெரிகிறது. இலத்தீனில் மூன்று, பிரெஞ்சில் ஏழு ஜெர்மனியில் நான்கு தெலுங்கில் ஒன்று சம்ஸ்கிருதத்தில் ஒன்று ஹிந்தியில் ஒன்று மலையாளத்தில் ஒன்றுகப் பிறமொழிப் பதிப்புக்களும் வெளிவந்துள்ளன.

ஓதற்கெளிதாய் உணர்தற்கரிதாகி வேதப்பொருளாய் மிகவிளங்கும் திருக்குறளைத்தந்த திருவள்ளுவர்பெருமானின்திருநாள் வைகாசி அநுட(**24-5-56**) நாளாகும்.

இப்பெரியார்களின் திருநாட்களை முறையாகக்கொண்டாடி இன்புறுவோமாக

## பல தொழில் நுணுக்கப் பயிற்சிப் பள்ளி

அண்ணுமலைநகர் மே 14-

செட்டிநாடு புகைவண்டி நிலையத்தை ஒட்டி பல தொழில் நுணுக்கப் பயிற்சிப் பள்ளி ஒன்றை நிறுவ ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் நினைவு அறநிலையம் வேண்டிய முயற்சிகளை எடுத்துவருகிறது என்று ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் நினைவு அறநிலையச் செயலாளர் திரு சோம லெ லெட்சுமணன்செட்டியார் இன்று பி டி ஐ நிருபரிடம் பேசுகையில் குறிப்பிட்டார்.

முதலாண்டில்நிலப்பொறியியல் துறையில் 50 மாணவர்கள் சேர்க்கப்படுவர் என்றும் மாணவருக்கு விடுதிவசதிகளும் செய்யப்படும் என்றும் அவர் மேலும் குறிப்பிட்டார்.

## பிள்ளை பிடித்தவர் கைது

பரமக்குடி மே 13-

பரமக்குடியில் சிறுபிள்ளைகள் பிடித்துச் செல்லப்படுவதாயும் அதன் காரணமாகச் சிறுபிள்ளைகள் காணப்படவில்லையென்றும் ஒரே பீதியாக இருக்கிறது 5வயதுள்ள ஓர் ஆண் பிள்ளையையும் ஒரு பெண்பிள்ளையையும் ஒரு ஆசாமி பிடித்துக்கொண்டு செல்லுகையில் திருப்புவனம் போலீசாரால் அவர் பிடிபட்டிருப்பதாக இங்குத்தகவல் கிடைத்தது. இதன்பேரில் பிள்ளைகளைக் காணுமல் தேடித்திரிந்த பெற்ருேர்கள் திருப்புவனம் சென்று போலீசாரிடமிருந்து தங்கள் பிள்ளைகளைத் திரும்பக் கூட்டி வந்திருக்கின்றனர்.

பிள்ளைகளைப் பிடித்துச்சென்ற இந்த ஆசாமியின் பெயர் அந்தோணி என்று கூறப்படுகிறது. திருப்புவனம் போலீசார் இவரைக் கைதுசெய்து மேற்கொண்டும் புலன்விசாரணை செய்துவருவதாகத்தகவல்கிடைத்துள்ளது




## தங்கம், வெள்ளி

மதுரை மே 15.

| | | | |
|---|---|---|---|
| பாட்லா | 107 | 6 | 0 |
| சவரன் | 67 | 12 | 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 | 8 | 0 |
| வெள்ளி 100தோலா | 186 | 0 | 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 14 | 6 |

## ஆண்டுவிழா

நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலையின் முப்பதாம் ஆண்டு நிறைவு விழா மே மீ 5உ நிகழ்ந்தது.

காலை 9மணியளவில் திருநாவுக்கரசு சுவாமிகளின் திருஉருவப்படம் தேரில்வைத்து அலங்கரிக்கப்பெற்று ஊர்வலம்கொணரப்பெற்றது.

மாலை 3மணியளவில் முதுபெரும்புலவர் பெருஞ்சொல் விளக்கனர் அ மு சரவணமுதலியார் தலைமையில் விழா தொடங்கப்பெற்றது. பள்ளிப் பொறுப்பாளர் பழ நாராயணன் செட்டியார் வரவேற்பு வழங்க, பழ. கிருஷ்ணன் அவர்கள் அறிக்கை வாசித்தார்கள்.

குழந்தைகளின் இயல், இசை, நாடகம் முதலியன நிகழ்ந்தன. சென்னை அரசினர் கலைக்கல்லூரி உதவித் தமிழ்ப்பேராசிரியர் வித்துவான் டி முத்துக்கண்ணப்பன் அவர்கள் 'அப்பரும் யாணவருலகமும்' என்றபொருள் பற்றி அழகுறச் சொற்பொழிவாற்றினர்கள். விழாவிற்கு வந்திருந்தஆசிச்செய்திகள் தலைமை ஆசிரியர் திரு கே ஆராவமுதன் அவர்களால் வாசிக்கப்பெற்றன.

திரு பழ நாராயணன் செட்டியார் நன்றிகவில, நாட்டுவாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவேறியது.

---

## வரிகொடுப்போர்

### சங்கக்கூட்டம்

தேவகோட்டை மே 12-

தேவகோட்டை நகர வரிக்கொடுப்போர் சங்கக் கூட்டம் திரு என் பாடகலிங்க ஆசாரி தலைமையில்நடைபெற்றது.

அவ்வமயம் புத்தாண்டிற்குப் புதிய செயற்குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

தலைவர்: திரு எம் ஆர் சிவராமய்யர், செயலாளர்கள் திருவாளர்கள்: எல் சீனிவாச ஐயங்கார், ஆவி ராம மெய்யப்பசெட்டியார், பொருள்காப்பாளர்: திரு பழ ப ப பழனியப்ப செட்டியார்.

## செங்கோல் ஆதீனம்

பெருங்குளம் செங்கோல் ஆதீனம் சைவசித்தாந்தப் புராண நூல்நிலையம் மூன்றாவது ஆண்டு நிறைவுவிழா ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக சுந்தரசத்திய ஞான பரமாச்சாரிய சுவாமிகள் தலைமையில்சிறப்பாய் நடைபெற்றது.

சுவாமிகள் அருளாசிகூறுகையில் அடியார்கள் இணக்கமும் சத்சங்கமுமே சமயப்பண்பாட்டைச் சிறப்புறச் செய்யும் திருவிளையாடற் புராணம் சிவபெருமானுடைய திருவிளையாடல்களைச் சொல்லுவது பெரிய புராணம். அறுபத்துமூன்று நாயன்மார்கள் ஆன்மநாயகனுக்கு வாழ்நாளை அர்ப்பணம் செய்த பெருமை கூறும். நம் முன்னோர்கள் தந்த அருட்செல்வம் சாத்திரங்களே.

சித்தாந்தம் நம் சிறுமை பற்றியும் உலகபாசபந்தங்களால் மறைப்புண்டு. தலைவனை அறிய மாட்டாமைபற்றியும் பதி, பசு, பாசஇலக்கணங்களையும் விளக்குகின்றது. விஷக்காற்று இருள் படர்ந்த சூழ்நிலைகள் உங்கள் மனோபாவத்தை மூழ்கடிக்கும் அதற்கு இடம்கொடுக்காதீர்கள். பேசுகிறபேச்செல்லாம் தலைவனைப் பற்றியும் பஞ்சாக்ஷரம் சதா ஒலித்துக்கொண்டுமிருந்தால் அவன் தானாய் நான் அவனாய் உறவு கலந்துவிடுகிறது. அப்போதுஏக சுதந்திரந்தான். அறத்தான்வருவதே இன்பம் மற்றெல்லாம் புறத்தபுகழுமில; நீங்கள் அருள் வாழ்வு வாழ்வதற்கு உங்களைச் சார்ந்த அனைவர்களையும் அருள் நெறிப்பாதையில் இழுத்துச் செல்லுங்கள். இம் மாதிரியான நூல் நிலையங்களை நன்கு பயன் படுத்திக்கொண்டு புராணங்களையும் சித்தாந்தங்களையும் நன்கு படித்துத்தெளிந்துபயனடைந்து அறிவியல்பும் அருள் இயல்பும் அடையுங்கள் என அருளாசி கூறிமுடித்தார்கள். ஆதீன வித்துவான் அண்ணாவி இராமகிருஷ்ணன் திருஞானசம்பந்த ஓதுவாமூர்த்தி முதலியவர்கள் சொற்பொழிவு ஆற்றினார்கள். தேவாரப்பாடசாலை மாணவ மாணவிகள் சைவ வினாவிடை அப்பர் சுவாமிகள் சரிதம்பற்றிப் பேசினார்கள். தேவார ஆசிரியர் சிவபெருமான் படத்திற்குக் கற்பூரம் செய்துசிவபுராணம் ஓதிய பின் திருப்புகழ் பாடிப்பின் பிரஸாதம் வழங்கிக்கூட்டம்இனிது முடிந்தது.

## இலக்குமிபுரம்

சொக்கலிங்க வித்தியாசாலை யின் 29வது ஆண்டுவிழா துன்முகி சித்திரை 24ம் நாள் பிற்பகல் 4மணி அளவில் காரைக்குடி நகராண்மைக்கழக ஆணையாளர் எதிராஜுலு எம். ஏ., அவர்கள் சீரிய தலைமையில் கொண்டாடப்பட்டது. தலைவர் அவர்களை அதிபர் அவர்களின் சொக்கலிங்க விலாஸிலிருந்து திருவாசக பாராயணத்துடன் சிவன்கோயிலில் தரிசனம்செய்த பிறகு வித்தியாசாலைக்கு ஊர்வலமாக அழைத்து வரப்பெற்று விழா ஆரம்பிக்கப்பெற்றது. இறைவணக்கத்திற்குப்பின் அதிபர் அவர்களால் வரவேற்பு இதழ் வாசித்தளிக்கப்பெற்றது. தலைமைஆசிரியர் ஜி. சாமிநாதய்யர் ஆண்டறிக்கை வாசித்தார்.

தலைவர் முடிவுரைக்குப் பின் மாணவ மாணவிகளின் பாட்டு, பேச்சு, நடிப்பு, கும்மி, கோலாட்டங்கள் சிறு நாடகம் நடைபெற்றன.

காரைக்குடி நகரசபை உபதலைவர் திரு, அள. சுப்பையா அம்பலம் அவர்களும் நகர் நலச் சங்கத் தலைவர் திரு ஆவி லெ அருணாசலம்செட்டியார் அவர்களும் பேசினார்கள்

காரைக்குடி தொகுதி எம் எல். ஏ,, திரு ஆரு ஆ ராம சொக்கலிங்கம்செட்டியார் அவர்கள் வித்தியாசாலையின் நடைமுறையைப்பாராட்டி வெற்றி பெற்ற மாணவமாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினார்கள்.

தலைவர்முடிவுரையில் மாணவ மாணவிகளின் திறமையைப் புகழ்ந்தார்கள்.

வித்தியாசாலை அதிபர் ந சொ அரு அருணாசலம் செட்டியார் அவர்கள் நன்றி கூறி, வரும் ஆண்டில் அதிகமான சிறுர்களை அனுப்பி ஆதரவு அளிக்குமாறு கேட்டுக்கொண்டார்கள். நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நிறைவெய்தியது

## நஷ்டஈடு கேட்க தேதி நீடிப்பு

ரங்கூன் மே, 9.

பர்மாவில்நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்குச் சொந்தமான நிலங்களை பர்மா அரசாங்கம் எடுத்துக் கொண்டுள்ளது. அந்த நிலங்களுக்கு நஷ்டஈடு கேட்டு மனுக்கொடுக்க கடைசி தேதி ஜூன் 30 என்று. பர்மா அரசாங்கம் அறிவித்திருக்கிறது

# பொருட்காட்சிச்சாலைகள் அபிவிருத்தி

இந்தியாவில் பொருட்காட்சிச் சாலைகள் வெறும் அபூர்வப் பொருள்களுக்கான இருப்பிடமாக மட்டிலுமே இருந்து வராமல் முதியோர் கல்வி, ஆதாரக் கல்வி, பொதுக்கல்வி, விசேஷக் கல்வி ஆகியவை போன்ற கல்வித்துறையின் பல்வேறு பிரிவுகளுக்குச் சேவை செய்துவரும் ஸ்தாபனங்களாகவும் அமைந்திருக்கவேண்டும்.

அதுவிஷயமாக, பொருட்காட்சிசாலைகளின் வேலை நடவடிக்கைகளை ஒருங்கிணைத்துசீர்படுத்துவதற்காக இதுவரை எவ்வளவோ முயற்சிகள் செய்யப்பட்டு வந்திருக்கின்றன. மார்க்ஹாம், ஹார்க்ரீவ்ஸ் ஆகிய இருவர் பொருட்காட்சி சாலைகளின் சர்வே ஒன்றை நடத்தியது. பொருட்காட்சிசாலை காப்பாளர்களின் மாநாடு கூட்டப்பட்டது. 1944ல் இந்திய பொருட்காட்சி சாலைகளின் சங்கம் அமைக்கப்பட்டது, உத்தரப்பிரதேச சர்க்கார், 1947ல் நிறுவிய பொருட்காட்சி சாலைகளின் சீரமைப்புக் கமிட்டி செய்துள்ள வேலைகள், ஆகியவற்றை அவற்றில் முக்கியமாகக் குறிப்பிடலாம். இவ்வளவு முயற்சிகளெடுத்து வந்தும் குறிப்பிடத்தக்க அளவுக்குப் பலன் கிடைக்கவில்லை.

பொருட்காட்சி சாலைகள் இன்றைய கல்வித்துறையில் முக்கிய பங்கெடுத்துவர வேண்டுமென்பதை உணர்ந்த மத்திய சர்க்கார் பொருட்காட்சி சாலைகளின் காப்பாளர்கள், டைரெக்டர்கள் ஆகியோரின் மகாநாடு ஒன்றைச் சென்ற வருஷம் கூட்டினர். அம்மகாநாடு செய்துள்ள சிபாரிசுகளின் பலனாக நாட்டில் சுற்றுப்பிரயாணம்செய்து, அவற்றின் பிரச்னைகள் சம்பந்தமாக விரிவானதொரு சர்வே வேலையை மேற்கொள்ளுவதற்காக நிபுணர் கமிட்டியொன்று அமைக்கப்பட்டிருக்கிறது. பாதுகாத்து வைப்பதற்குஏற்ற பொருள்களைச் சேகரித்து வருவதற்காக தேசம் முழுவதும் நட



வெண்கலத்தாற் செய்யப்பெற்ற நடராசமூர்த்தி

வடிக்கை யெடுக்க வேண்டியது அவசியம் என்றும் அத்தகைய பொருள்களைச் சேகரித்துவைத்துள்ள தனி நபர்களிடமிருந்து அப்பொருள்களைப் பெறுவதற்கு அதிகாரமளிக்கும் வகையில் சர்க்கார் சட்டமியற்ற வேண்டுமென்றும் அம்மகாநாட்டில் கருத்து தெரிவிக்கப்பட்டது மற்றும் பொருட்காட்சிச்சாலை சிப்பந்திகளின் நிலைமை காட்சிப்பொருள்களைப் பத்திரமாகப் பாதுகாத்து வைப்பதற்கானஏற்பாடுகள் இந்தியாவில் உள்ள பொருட்காட்சிச்சாலைகளின் தொழில்நுட்பப் பிரச்னைகளுக்கு முடிவு காணுவதற்கு உதவியளித்து வருவதற்காக தொழில்நுட்ப ஆலோசனைசெர்வீஸ் ஒன்றை ஏற்படுத்துவது ஆகிய விஷயங்கள் சம்பந்தமாக சிபாரிசுகள் செய்யப்பட்டன.

சிப்பந்திகளுக்கான பயிற்சி வசதிகளைப் பெருக்க வேண்டியதன் அவசியம்பற்றி மகாநாட்டில் வலியுறுத்தப்பட்டது. பொருட்காட்சிச்சாலைகள் சம்பந்தமானநவீனநுட்பச் செய்முறைகளையும் காட்சிப் பொருள்களைப் பார்வையில் வைப்பதற்கான நடைமுறைகளையும் அறிந்துவருவதற்காக தேர்ந்தெடுக்கப்பட்ட சிப்பந்திகளை வெளிநாடுகளுக்கு அனுப்பவேண்டுமென்றும் அது எடுத்துக் கூறியது.

விஞ்ஞானத்துறை, தொழில் துறை, எஞ்சினியரிங்துறை, இயற்கைச் சரித்திரத்துறை ஆகியவற்றிலும் எல்லாவற்றிலும்முக்கியமாகக்குழந்தைகளுக்காகவும் விசேஷப் பொருட்காட்சிச்சாலைகளை ஏற்படுத்தவேண்டிய அவசியம்பற்றியும்சிபாரிசுசெய்திருக்கிறது. ஏற்கெனவேயுள்ள பொருட்காட்சிச்சாலைகளில் குழந்தைகளுக்கான காட்சிப் பிரிவுகளை ஏற்படுத்துவதன் மூலம் அதை ஆரம்பிக்கலாமென்றும் யோசனை கூறப்பட்டது. பொருட்காட்சிசாலைகளின் அபிவிருத்திக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உரிய முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது.

---

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-32
துன்முகி-வைகாசி - 11
24-5-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## குறிஞ்சி

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் நீட்டிப்ப, அதனால் வருந்திய தலைவி அழிந்து கூறியது.

இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை, நீலத் தன்ன பாசிலை யகந் தோறும். வெள்ளி யன்ன விளங்கினர் நாப்பட், பொன்னி னன்ன நறுந்தா துதிரப், புலிப்பொறிக் கொண்ட பூநாறு குரூஉச் சுவல், வரி வண் டூதலிற் புலிசெத்து வெரீஇப், பரியுடை வயங்குதாள் பந்திற் றுரவத், தாங்கவுந் தகைவரை நில்லா வாங்கண், மல்லலஞ் சேரி கல் லெனத் தோன்றி, யம்பன் முதூ ரலரெழச், சென்ற தன்றே கொண் கன்றேரே. **249** :-உலோச்சனார்

இரும்புபோன்ற கரிய கிளையையுடைய புன்னை நீலம் போன்ற பசிய இலையிடமெங்கும் வெள்ளி போன்ற விளங்கிய பூங்கொத்தின் நடுவிலுள்ள பொன்போன்ற நறிய மகரந்தம் சிந்தப், புலியினது புள்ளியைக் கொண்ட அழகு விளங்குகின்ற நல்ல நிறம் பொருந்திய மேற்புறத்தையுடைய வரியமைந்த வண்டுகள் ஊதுதலினால் புலியோசையோ வென்று அயிர்த்து அஞ்சிப் பலமுறை இழுத்து நிறுத்தவும், நிறுத்தியஇடத்தில் நில்லாவாகித் தேரிற் பூட்டிய குதிரையினது விளங்கிய கால்கள் பந்துபோலத் தாவ, வளமிக்க நமது சேரியில் கல்லென்னும் ஓசையோடு வெளிப்பட்டுச் சிறிய பழிச்சொல்லைக் கூறும் முதிய ஊரெங்கும் பெரிய பழிதூற்றுதலினால் கொண்கனது தேர் இங்கு நில்லாது சென்றதன்றோ?

பாலகவி

# பொறுப்புள்ள பேச்சா?

—[ வீரசிவம் ]—

'வேஷம் போட்டுத் திரிகிறார்கள், மடாதிபதிகள்!' 'ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் குற்றச் சாட்டு' என்றசெய்தியை 8-5-56 தினத்தந்தியில் பார்த்து வியப் படைந்தேன்.

மடாதிபதிகளைக் குற்றஞ் சொல்வது ஒரு பழக்கமாகப் போய்விட்டது.

இன்று மடாதிபதிகள் செய்து வரும் பணிகளை, அவர்கள்விளம் பரப்படுத்துவதில்லை. அவைகளை உணர்ந்த பொதுமக்கள், விவரம் அறிந்து பொறுப்புடன் பேச வேண்டிய திரு, ஓமந்தூர் ராமசாமிரெட்டியார் அவர்கள் சொற்களைக்கேட்டு, உண்மையில் வருந்தத்தான் செய்வார்கள் என்பது உறுதி.

இந்த வேளையில் திருமடங்கள் செய்தருளும் சில திருப் பணிகளை எடுத்துரைப்பது நன்று என எண்ணுகிறேன்.

திருவாவடுதுறை ஆதீனம் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கிற்கும் உரை வெளியிட்டு, (தொகுதி ஒன்று சுமார் ரூ 300/ பெறுமானமான புத்தகங்கள்) அத்தொகுதிகளைப் (sets) பல்லாயிரக் கணக்கில் இலவசமாக வழங்கி வருகிறது. திருமந்திர மாநாடுகள் சைவசித் தாந்த மாநாடுகள் நடத்தியும் திருமந்திர நூல்கள் வெளியிட்டும், திருமந்திரம் சைவசித்தாந் தம் பரவ ஆவன செய்து வருகிறது.

தருமபுர ஆதீனம் திருக்குறளுக்கு உரைவளம்கண்டும், திருவாசகத்தை அழகிய கண்கவர் வனப்புடன் வெளியிட்டும், சென்னை, தருமை, நெல்லை முதலிய இடங்களில் தொடர்ந்து பல மாநாடுகள் நடத்தியும் வருவது குறிப்பிடத்தக்கது.

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தின் பேரறக் கட்டளைகள் காசி முதல் கன்னியாகுமரி வரை

பரந்து விரிந்தவை, அவற்றை அறியாதார் அறியாதாரே! தமிழினத்தின் தனிப்பெரும்நூலாம் திருக்குறள் முழுவதையும் ரூ 15000/ செலவில் மதுரைத் திருக்கோவில் பொற்றாமரைத் திருக்குளக்கரையில் சலவைக் கல்லில் பொறித்திருப்பதையாவரும் கண்டு உணர்ந்து மகிழ வேண்டும்.

குன்றக்குடி மகா சந்நிதானம் அங்கிங்கெனாதபடி எங்கும் விரைந்து, மக்களுடன் மக்களாய் அமைந்து சமயச் சொற்பொழிவுகள் அருளி விழிப் பூட்டி வருவதுமறுக்க முடியாத உண்மை.

அமைதியான வகையில் உறுதியான முறையில் மதுரை ஆதீனம் மதுரைத் திருக்கோவிலில் வாரம் மூன்று முறை கூட்டு வழிபாடு, பஜனை முதலியவை நடத்தியும் ஆடிவீதியில் பல்லாயிரக்கணக்கான மக்கள் பயன்பெறப் பெருஞ் சொல்லாளர்களைக் கொண்டு, பணிகள் அருளியும் வருவதை மதுரைக் கோபுரங்களும் அறிவித்துக் கொண்டிருக்கின்றன. அதனோடு பிறமதம் புகுந்து, மீண்டும் இந்துக்களாகிறவர்களுக்குத் தீட்சை கொடுத்துப் புதுவாழ்வு அளித்து வரும் மதுரை ஆதீன கர்த்தரது செயல்களை உணராதவர்களை என்ன சொல்வது?

திருவெம்பாவை-திருப்பாவை மாநாடுகள் மூலம் ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் ஊட்டி வரும் புத்துணர்ச்சியால் ஏற்பட்டிருக்கும் நற்பயன்களை யார் மறுக்க வல்லார்?

கல்வித் துறையிலும், திருமடங்கள் தமது கடமையைச் செய்து வருவதை ஆங்காங்குள்ளவர்கள் அறிவர்.

'இனிய உளவாக இன்னாத கூறல், கனி இருப்பக் காய் கவர்ந்தற்று'

மேலும் சிறப்புடைப் பணிகள் செய்யுமாறு தூண்ட, ஒவ்வொரு இந்துவும் கடமைப் பட்டவர். ஆனால் இவ்வாறு கடுஞ்சொல் சொல்வதால் யாது பயனும் விளையாது.

பிற மதத்தவர்கள்தம்து குருமார்களை இவ்விதம் பழித்துரைப்பார்களா?

வடலூரில் குருகுலம் அமைக்க எத்தனை ஆண்டுக

ளாக எத்தனை ஆயிரம் ரூபாய் கள்செலவு செய்யப் பெற்றன? இன்னும் குருகுலம் முழுநிலையில் அமையவில்லை என்றால், சொல் லுதல் யார்க்கும் எளிய அரிய வாம் சொல்லிய வண்ணம்செயல்' என்பதைத்தானே நினைக்க வேண்டியிருக்கிறது!

"Insldad of blaming the darkness light one candle" குற்றஞ் சொல்வதை விட, நம்மால் இயன்றதைச்செய் வதே மேல்.

திரு, ஓமந்தூரார் போன்ற வர்கள் சான்றாண்மை மிக்கவர் கள் ஆதலால் "சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து ஒருபால், கோடாமை சான்றோர்க்கு அணி"

"குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்" என்ற திருக் குறள்களை நினைவூட்டி, இதை நிறுத்திக்கொள்ளுகிறேன்.

ஆசிரியர் குறிப்பு:

இக்கட்டுரையாளராகிய திரு, வீரசிவம் அவர்கள், தமதுஇயற் பெயருக்கேற்ப, உண்மையை யாருக்கும் அஞ்சாது வெளியிட முன்வந்தமைக்கு நாம் மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம். அரசி யல் அலுவலில் உயர்ந்த பணி யாற்றும் பெரியவர்கள்முதல் பொதுமேடைகளிலும் நான்கு பேர் கூடுகின்ற நடுத்தெருவிலும் வாய்வம்பளக்கும் சிறியவர்கள் வரை அனைவரும் வாய் கூசாது குறைகூற வேண்டுமென்றால் அவர்களுக்குப் பொருளாகச் சைவசமயமும் சமயச் சான் றோர்களும் சமய நிலையங்களுந் தான் கிடைக்கின்றன.

'ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி' என்ற பழமொழி நம் நாட்டில் வழங்குவதைக் கொண்டு, இத் தகைய குறைகூறுவோர் பல் லாண்டுகளாக வாழையடிவாழை யென வளர்ந்து வருகிறார்க ளென்று நன்கு தெரிகிறது. 'பிற ராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும் மறவாமே நோற்ப தொன்றுண்டு - பிறர் பிறர், சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்கர்த்து யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்' என்பது தமிழ்ச்சான்றோர் திருவாக்கு.

தமிழ்ப்பண்பென்பது, பிறர் செய்த உதவியையன்றிப் பிறி தெதையும் நினையாததுதான். இவ்வுயர்ந்த பண்பைப்பிறப் பொழுக்கமாகக் கொண்டு வாழ்ந்த நன்மக்களால் நிரம்பி

யிருந்த கம்காடு, அழுக்காறு முதலியவற்றல் உண்டாகின்ற கொடுஞ்சொல், பழிச்சொல், பயனில்சொல், குறளை ஆதியவற்றினலேயே தங்களை உயர்த்திக் கொள்ளக் கருதுகின்ற மக்கள் மல்கியதாக ஆகிவிட்டது.

நண்பர் ஓ. பி. இராமசாமி ரெட்டியாரவர்கள், நேர்மைக்கு இலக்கிய மானவர்ளென்று பெரும்பாலான மக்களால் மதிக்கப்பெறுகிறவர்கள் அவர்கள் வாயிலிருந்து வெளி வருகின்ற ஒவ்வொரு சொல்லும் கடைந்தெடுத்த நன்மணியாய் இருப்பதுதான் பொருத்தமாகும். 'வேஷம் போட்டுத் திரிகிறார்கள் மடாதிபதிகள்' என்று அவர்கள் சொன்னார்களென்றல் மற்றவர்களைப்போல ஆராயாது எதையும் பேசிவிடும் பழக்கம் இவர்களுக்கும் உண்டு என்று தானே பொதுமக்கள்கருதுவார்கள்.

வேடநெறி நில்லாத எத்தனையோ பேர்கள், வேடம்பூண்டு கொண்டு, பற்பல துறைகளிலும் ஏமாற்றி வருவதை முதலமைச்சராகவும் இருந்து அநுபவம் பெற்ற திரு, ஓ. பி. ஆர் அவர்களைவிட நாம் அதிகம் அறிய இடமில்லை. மடாதிபதிகள் வேடம் பூணும் கடமையுடையவர்கள் என்பதைக் குருகுலம் அமைக்கும் முயற்சியில் பெரிதும் ஈடுபட்டுள்ள திரு, ஓ. பி. ஆர் அவர்கள் 'வேடநெறி நிற்பார் வேடமெய் வேடமே' என்ற திருமந்திரத்தின் வாயிலாக நினைவுகூருதல் வேண்டும்.

துறைசை, தருமை, பனசை, அருணை, மதுரை ஆகிய சைவ மடங்களின் அருட்செயல்கள்-காமகோடி மடத்தின் அறவுரைகளின் வாயிலாக நாட்டிற்கு ஏற்பட்டிருக்கும் நன்மைகள்பற்றித் திரு, வீரசிவம் அவர்கள் கட்டுரை விரியுமென்று கருதி மிகமிகச் சுருக்கமாகக் கூறியுள்ளார்கள்.

சைவப்பணிக்கென்றே] சேமம் பெற்றுள்ள சிவாலய மடாலய வருவாயைக் காலம் போகிற போக்கையறிந்து,]அத்!! திருப்பணிகளை எவ்விதக் குறையுமின்றி நடத்திவிட்டுப் பொதுப் பணிக்கும்செலவிட்டு வருகிற நமது மடாதிபதிகளைக் குறை கூறுவதற்காகவே ஒரு சிலர் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கின்ற இந்தவேளையில், உண்மையுணர்ந்து பேசவேண்டிய பொறுப்புள்ள திரு, ஓ பி ஆர் அவர்கள் இவ்வாறு கூறியது வருத்தத்திற்குரியதேயாகும்.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

இடையில் அவ்வணக்கத்தின் மதிப்புக் குறைந்தது; இனியாயினும் அவ்வணக்கம் பழைய உயர்நிலைக்குக் கொண்டுவரப்பட வேண்டும் என்ற பிரசங்கம் அது. அதில் முருகன், திருமால், இந்திரன், வருணன், துர்க்கை, காமன், சூராமகளிர், ஐயனார்; வீரபத்திரன், மதுரை வீரன், முனியன், சங்கிலிக்கறுப்பன், பாவாடைராயன், காளியாத்தாள், நடுவீதியம்மன், ஊரம்மன், அங்காளம்மன், அங்கம்மன், முத்யாலம்மன் என்ற தெய்வப்பெயர்கள் வருகின்றன. அத்தெய்வங்களுட் சிலவற்றிற்கு அவற்றின் பெயர்கள், உருவ அமைப்புக்கள், பாமர சிருட்டியாகிய கதைகள் முதலியவற்றை வைத்துச் சரித்திரக் குறிப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. சிலவற்றிற்கு அக்குறிப்பு மில்லை.

'(அத்தெய்வங்களுள்) அகால மரணம் ஆனவர்...முதலியோர் ...தெய்வங்களாகப் பாமரமக்களால் வழிபடலாயினர். இவற்றை நீக்குதல் அறிவுக்குப் பொருத்தமாகும்' என்கிறாரவர். அது சரி. ஆனால் எஞ்சியுள்ள தெய்வங்களை என்வணங்கவேண்டும்? வீரர்-ஒழுக்கத்தில் உயர்ந்தோர்-பத்தினிப்பெண்டிர்-இவர்தம் கோயில்களை அப்படியே வைத்திருத்தலும் அத்தெய்வங்களின் உண்மை நிலைமையை மக்கட்கு உணர்த்தலும் அறிவுடையோர் செயல்களாகும்' என்கிறாரவர். அவ்வெஞ்சியுள்ள தெய்வங்கள் இவ்வீரர் முதலியோர் தானோ? ஆயின் அவற்றைவணங்கு முறையை விளக்கும் பிரமாண நூல் எது?

'வல்லவனுக்கு வல்லவன்வையகத்திலுண்டு' என்பது பழமொழி. 'ஒருவன்பால் வெற்றி கொண்டோ ரொருவன் பாற்றோல்வி கொள்ளும்' என்றது தணிகைப்புராணம். ஆகலின் எந்த வீரனையுந் தெய்வமெனக் கொண்டு வழிபடல் அறிவுடைமையன் றென்க. அக்கட்டுரைக் காரணராகிய நவீனர் ஒழுக்கமுடையாரா? அல்லரா? உடையார்தானென்பர் சிலர். அல்ல

ரென்பாருமிருக்கக் கூடும். அங்கவீனர் காலத்துக்குப் பின் அவருக்குக் கோயில்கட்டவிரும் பலாம் அவர்சிடர். பிறருக்கும் நம்பிக்கை பிறக்குமாறு அங்கவீனர் தம்பொழுக்கத்தை மெய்ப்பித்துச் செல்வதே நலம். கொடுப்போருங் கொள்வோருமாகிய இருதிறத்தாரின் சம்மதம் பெற்றுத் தன்னை யொருவன் விதிமணத்தாற் கைப்பிடித்த பிறகு தன் வாழ்வில் அவனொருவனுக்கே இன்பம் ஊட்டியும், ஒருக்கால் தான் இளமையிலேயே விதவையாய்விட்டால் சாங்காறுங் கைம்மை நோன் புழந்தும் வருகிருள் ஒருத்தி. அச்சம்மதம் பெருமலும், விதிமண மில்லாமலும் தான் ஒருவனேடு வாழ்க்கையொப்பந்தஞ் செய்துகொண்டு அவனுக்கு இன்பம் ஊட்டிவருகிருள் மற்ஞெருத்தி. இன்ஞெருவனேடு வாழ்க்கையொப்பந்தஞ் செய்துகொண்டு அவனுக்கு இன்பம் ஊட்டிவருகிருள் பின்ஞேராறுதலி. சட்டமூலம் முந்திய கணவனிடமிருந்து விலக்கப்பெற்று வேருருவனேடு வாழ்க்கையொப்பந்தஞ் செய்துகொண்டு அவனுக்கு இன்பம் ஊட்டிவருகிருள் இன்ஞெருத்தி. இந்நால்வகையாருமேபத்தினிகள்தாஞ? அல்லது அவருள் எவளைப் பத்தினி யென்பது? பத்தினிக்குக் கோயில் கட்டுமுன் பதிவிரதா தருமமாவ திதுவென அங்கவீனர் விளக்கியாக வேண்டும்.

இனி வீரரையும், ஒழுக்கமுடையவரையும், பத்தினிகளையும் மதிக்கக் கூடாதென்பது என் கருத்தன்று. அவரைத் தெய்வமெனக் கோடல் வேண்டுமா? அதுதான் பிரசினை. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்கிருர் ஔவையார். அன்ன வாக்கியங்கள் பிறவுமுள. அப்பாட்டியார் வாக்கியத்துக்கு ஒவ்வொரு புதல்வனுந் தன் பெற்ருருக்குக் கோயில் கட்டி வழிபாடு செய்ய வேண்டுமென்பதா பொருள்? ஆமெனின் தமிழகத்தில் நடுகற்களே மலிந்து மக்கள் வாழ இடமில்லாமற்போம். அம்மக்களும் முழுமுதற் பொருளாகிய கடவுளின் உண்மையியல்பையறியமாட்டாமல் சுத்தக் காட்டுமிராண்டிகளே யாவர். அவ்வாக்கியத்தின் உண்மைக் கருத்தாவது ஒவ்வொரு புதல்வனுந் தன் பெற்ருேரை மதித்தொழுகுக வென்பதே. அப்படியே வீராதியோரையும் நன்கு மதிக்கலாம்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி வைகாசி - 11

# அருளாசிரியர் திருநாட்கள்

வர இருக்கின்ற வாரம் சைவ நன்மக்களுக்கு வாழ்வை வழங்கிய அருளாசிரியர் மூவரை, நினைவு கூர்ந்து வழிபடவேண்டிய நாட்களைக் கொண்டிருக்கின்றது. **27-5-56**உ சமயப் பேராசிரியர் நால்வருள்முதல்வராகிய திருஞான சம்பந்தப் பெருந்தகையாருக்கும் வடநாடு வரை சென்று சித்தாந்த சைவத் திருநெறியை நிலைநாட்டிய குமரகுருபர அடிகளாருக்கும் **30-5-56**உ தருமபுர ஆதீன ஸ்தாபகராகிய குருஞான சம்பந்தப்பெருமானுக்கும் உரிய நாட்களாகும்.

கருணையே வடிவமாயிருக்கின்ற ஆண்டவன், உலகியலின் அவ்வப்போதைய இன்றியமையாமைகளுக்கு ஏற்ப அருள் நோக்கம் புரிந்து, உயிர்களை உய்திநிலையில் நிறுத்துவது இயல்பு. அவ்வாறாகிய இறைவனது அருள்நோக்கம் நம்மிடையே பலவகைப்பட்ட உருத்தோற்றங்களெடுத்து வந்து இன்பத்தை வழங்கிச் சென்றதை வரலாற்று நூல்கள் நமக்கு அறிவிக்கின்றன.

புறச்சமய நெறியில் நின்ற ஒரு சிலரின் படிற்றொழுக்கம் உலகத்திற்குக் கேடு சூழத் தலைப்பட்ட பொழுது அதனைக்கண்டு மனம் வருந்தி ஆண்டவனிடம் முறையிட்ட சிவபாத விருதயர் பகவதியாரின் செல்வப் பேறாக ஆளுடைய பிள்ளையார் உலகிடைத்

தோன்றினுர் அவாது வருகை அந்நாளில் வாழ்ந்திருந்தவர்களை மட்டுமன்றி. இந்த நாளிலும் இனி எந்த நாளிலும் வாழுபவர்களையும் வளமுடையவர்களாக ஆக்கு கின்ற பெருமையை அளித்தது.

கோள்ளை கோள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத் தள்ளு கின்ற ஆளுடைய பிள்ளையாரது நினைவு நமது நெஞ்சைவிட்டு நீங் காது நிலைபெறுதல் வேண்டும். ஆதிரையில் தோன்றி மூலத்தில் சிவமாகிய அப் பெருமானை அவ ருக்குரிய **27-5-56** மூல நாளில் உரிய முறையால் வழிபட்டு உய்தி பெறுவோமாக.

சேந்தில் மேய வள்ளிமணாளன் திருவருளால் தோன்றி, அப் பெரு மானையும் அங்கயற் சண்ணம்மை யையும் தமது நறைபழுத்த தீந் தமிழின் ஒழுகு நறுஞ்சுவையில் வசப்படுத்தித், தருமை மாசிலா மணி தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய மூர்த்திகளின் அரு ளுணுக்கிற்கு வசப்பட்டு, காசியில் மகம்மதிய மன்னனை மகிழ்வித் துக் குமாரசாமி மடம் நிறுவியதவச் செல்வர் குமரகுருபர அடிகளார் அவரால் வளர்க்கப்பெற்ற செந் தமிழுஞ், சிவநெறியும் அவரது பிற்றோன்றல்களாகப் பனசைக் காசிமடத்தில் எழுந்தருளுகின்ற அருட்செல்வர்களால் பேணப் பெற்று வருவது உலகறிந்த ஒன்று வைகாசித் திங்கள் அமர திருதி யையாகிய **27-5-56**ல் அப் பெரு மானது திருநாளைக் கோண்டாட வேண்டுவது நம்மனோர் கடமை யாகும்.

திருஞான சம்பந்தர் சோழநாட் டிலே தோன்றிப், பாண்டி நாட் டிற்கு வந்து புறமதப் பூடுகளைக் களைந்து சைவப் பயிரை வளர்த் தார். குருஞானசம்பந்தர் பாண்டி நாட்டிலே தோன்றிச், சோழநாட் டில் அருளுபதேசம் பெற்றுத் தருமையிலே ஆதீனத்தை நிறு விச் சைவப் பயிரை வளர்த்தார். தமது மடத்திலே வாழுகின்ற பல்லிகளுங் கூடப் பதிபசுபாச வுண்மைகளை யுணருகின்ற அள வுக்குச் சித்தாந்த சைவத்திறன் றெரித்த இப்பெருமானது ஞான பீடத்திலே எழுந் தருளியிருந்து அருளாட்சி புரிந்து வரும் ஆசாரிய மூர்த்திகளின் நல்லுதவிகளை அறியாதார் உளரோ?

அமரபஞ்சமி நன்னளாகிய **30-5-56**ல் இக் குருமூர்த்திகளின் அருளொளி நம்மை வாழ்விப்ப தாக என வேண்டி வழிபாடாற்று தல் வேண்டும்.

---

## நமது வாழ்த்து

நற்சாந்துபட்டி திரு,மு அ. வீ வீரப்பசெட்டியாரவர்கள் குமாரர் குமரப்பசெட்டியார் செல்வி கல்யாணிக்கும் பனையப் பட்டி திரு. சுப. மு. இராம நாதன் செட்டியார் செல்வன் காடப்பனுக்கும் 23-5-56ல் திரு மணம் நடைபெற்றது.

மணமக்கள் மக்களோடு மகிழ்ந்து மனையறங்காத்து நெடிது வாழ்வார்களாக.

## அண்ணமலைப் பல்கலைக் கழகம்

அண்ணமலைநகர் மே 15.
அண்ணமலைப் பல்கலைக்கழகத் தில் இந்த ஆண்டில் பல புதிய வகுப்புக்கள் தொடங்கப்படும்.

வருகிற கல்விஆண்டில் 'சிவில் எஞ்சீனியரிங்' 'மெக்கானிக்கல் எஞ்சீனியங்' 'எலக்டிரிகல் எஞ்சீனியரிங்' பாடங்களில் மூன்றுஆண்டு 'டிப்ளமா' வகுப் புப் பயிற்சி அளிக்க ஒரு பல் தொழில்க் கல்லூரி தொடங் கப்படும். இதற்கு 'முத்தையா பல் தொழில் கல்லூரி' என்று பெயரிடப்படும். முத்தையா பல் தொழில் கல்லூரி வகுப் புக்களும், மாணவர் விடுதியும் சிதம்பரம் இராமசாமிச் செட் டியார் உயர்நிலைப்பள்ளியில் இப் போதைக்கு தொடங்கப்படும்.

திராவிட மொழிகளில் ஆராய்ச்சி செய்வதற்கானபுதிய பகுதி ஒன்றும் உடனடியாகத் தொடங்சப்படும்.

சிலப்பதிகாரம் முதலியஇசை நூல்களில் மாணவர்களுக்குப் பயிற்சி ஏற்படுவதற்காக ஒரு பரிசுத்திட்டம் ஏற்படுத்தப்படும்

புள்ளிவிவரக்கணக்கு நிலவள ஆராய்ச்சி ஆகிய பாடங்களில் மூன்ருண்டுச் சிறப்புவகுப்புகள் தொடங்கப்படும். விஞ்ஞானப் பாடங்களுக்கும் ஆசிரியப் பயிற்சி வகுப்புகள் தொடங்கப் படும். மேலே எல்லாத் துறைக ளும் 1956 ஜூலைமாதத்தில் ஏற் படும்.

சென்ற ஆண்டில் எம் ஓ எல் வகுப்பும் தாவர நூலில் எம் எஸ் ஸி வகுப்பும் பி காம் சிறப்பு வகுப்புகளும் தொடங் கப்பட்டன என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இந்த ஆண் டில் எஞ்சினியரிங் கல்லூரியில் அதிகப்படியான மாணவர்கள் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள் என்றும் தெரிகிறது.




கணபதி:- திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் 100. ஆதீனத்திற்குச் சொந்தமான எடுத்தணிவயல் ஸ்ரீபஞ்சாக்ஷர விநாயகர் ஆலய மகாகும்பாபிஷேக மலர். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியபடி ஆதீன மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகரவர்கள் எழுதியது. புத்தகம் வேண்டுவோர் ஆதீனத்திற்கு ரூ 1-4-0 தபால்தலைகள் அனுப்பிப் பெற்றுக்கொள்க.

கணபதிக்கு அகப்பகைவரும் புறப்பகைவரும் பெருகியிருக்கிற இந்நாளில், இத்தகைய தொரு பயனுடைய வெளியீட்டை வழங்கிய ஆதீனத்திற்கு எவ்வாற்றானும் கைம்மாறு செய்ய நம்மால் முடியாது. கணபதியின் மூர்த்திபேதங்கள் முப்பத்திரண்டையும் அழகான வண்ணப்படங்களில் தியான சுலோகங்களுடன் பதிப்பித்து, தமிழ், வடமொழி, ஆங்கில நூல்களில் ஏறக்குறைய எண்பது நூல்களை மேற்கோள் காட்டி எளிய நடையில் அரிய கருத்துக்கள் வெளிப்படக் கணபதியைப் புலப்படுத்தும் இந் நூலில் கணபதி பூசைமுறையும் அடங்கியுள்ளது.

---

## திருச்செங்கோடு

ஸ்ரீ அர்த்தநாரீசுவரர் ஸ்ரீ ஆதிகேசவப்பெருமாள் ரதோற்சவம்15-5-56ல் தொடங்கியிருக்கிறது. 28உ நிறைவுறும்.

---

## குருபூசை விழா

தருமபுர ஆதீனம் 24-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் 11வது ஆண்டுக் குருபூசைவிழா 18-5-56ல் சிறப்பாக நடைபெற்றது. காலை மாலை குருமூர்த்த ஆலயத்தில் விசேஷ அபிஷேக ஆராதனைகளும், திருமுறைப் பாராயணமும் இசையரங்கும் நிகழ்ந்தன.

## தருமபுரம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீஞானம்பிகா சமேத ஞானபுரீசுவர சுவாமி கோயில் மகோற்சவம் 21-5-56 தொடங்கிநடைபெற்று வருகிறது. 25உ ரிஷப வாகனக் காட்சி, 27உ திருக்கல்யாணம், 29உ திருத்தேர் 21-5-56 முதல் நடைபெறும் திருநெறிய தெய்வத் தமிழ்மாநாட்டில் பழந்தமிழ், நீதி, இதிகாசம், திருவிளையாடல், கந்தபுராணம் திருமுறை, மெய்கண்ட நூல்கள் குருமுதல்வர் அருள் நூல்கள் பற்றிய சொற்பொழிவுகள்நிகழுகின்றன. 30உ ஸ்ரீ லஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூசை விழா 31உ மாகேசுரபூசை பட்டணப் பிரவேசம் நடைபெறும். 31உ மாலையில் எம் எம் தண்டபாணி தேசிகர் இசையரங்கு நிகழும்.

## இரவீந்திரர் திருநாள்

12-5-56 மாலை 6 மணிக்கு கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் வாரக்கூட்டத் துவக்கவிழாவும், இரவீந்திரநாத தாகூர் திருநாளும் திரு, எஸ் சுப்பிரமணியம்அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டன.

திரு என் எஸ் வைத்தினுதன் இறைவணக்கம் பாடினுர். திரு, டி சீனிவாசன் விழாவைத் துவக்கிவைத்து இலக்கிய இன்பத்தையும் இறைவழிபாட்டையும் குறிப்பிட்டுப்பேசினுர்

அசுடோஷ் கல்லூரிப்பேராசிரியர் திரு, சுனில் குமார் சாட்டர்ஜி பேசுகையில் தாகூரின் வேதாந்த தத்துவங்களைப் பற்றி விவரித்தார்

திரு, என் விசுவநாதன் 'பாரதியும் தாகூரும்' என்ற தலைப்பில் விரிவுரை ஆற்றினுர்.

தலைவரின் முடிவுரைக்குப் பின்னர் திரு பிரசந்தாநந்தி 'இரவீந்திர சங்கீதம்' வழங்கினுர். செயலாளர் திரு கி சி ராகிருஷ்ணன் நன்றிகூறினுர். திரு நாராயணசுவாமியின் நாட்டு வணக்கத்துடன் கூட்டம் முடிவுற்றது.

## தங்கம், வெள்ளி

| மதுரை | மே | 22- |
|---|---|---|
| பாட்லா | 104 | 4 0 |
| சவரன் | 67 | 8 0 |
| ரெடிமேட் தங்கம் | | |
| (சவரன் எடை) | 66 | 8 0 |
| வெள்ளி 100தோலா | 184 | 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 14 6 |

## உங்களுக்குத் தெரியுமா?

1955 எப்ரல்மாதத்திலிருந்து டிசம்பர் மாதம் வரையுள்ள காலத்தில் இந்தியாவிலிருந்து மொத்தம் 6,95,400டன் சணல் தயாரிப்புப் பொருள்கள் ஏற்றுமதியாயின. 1954-ம் ஆண்டில் அதற்குச் சரியான காலத்தில் ஏற்றுமதியானது மொத்தம் 6,52,700 டன்.

இந்தியாவில் மின்சாரம் உபயோகிப்பவர்களின் மொத்தஎண்ணிக்கை 1950-ல் 15,00,737 1954ல் 21,64,782 ஆகஉயர்ந்துவிட்டது.

கிராம மின்சார வசதித் திட்டங்களுக்காக இரண்டாவதுஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்தம் 75கோடி ரூபாய் ஒதுக்கப்படும்.

1955-56ம் ஆண்டில் ஜனவரி மாதம்வரை சர்க்கார் எக்சைஸ் வரியின்மூலம் இந்திய சர்க்காருக்கு மொத்தம் 14.09 கோடி ரூபாய் வசூலாயிற்று.

ஹிமாசல பிரதேசம், உத்தர பிரதேசம், திரிபுரா ஆகியவிடங்களில் ரஸ்தா அபிவிருத்திவேலைகளுக்காக, மத்திய சர்க்கார் 21லட்சம் ரூபாய் வழங்கியுள்ளனர்.

இந்தியாவில் மாங்கனிஸ் கனி 1954ல் 14,13,068 டன்னும் 1955ல் 15,20,316 டன்னும் உற்பத்தியாயிற்று.

பழப்பொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகள் இந்தியாவில் மொத்தம் 602 உள்ளன. இவற்றுள் 137 தொழிற்சாலைகள் பம்பாய் ராஜ்யத்தில் உள்ளன.

நில வளப் பாதுகாப்பு வேலைகளுக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 26.83 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது; முதலாவது திட்டத்தில் 3.25 கோடி ரூபாய் ஒதுக்கப் பட்டிருந்தது.

பெரிய துறைமுகங்களின் அபிவிருத்திக்காக 62.28 கோடி ரூபாய் செலவாகக்கூடிய வேலைத் திட்டமொன்று இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படவிருக்கிறது.

இரண்டாவது திட்ட காலத்தில் எண்ணெய் ஆதாரங்களைக் கண்டுபிடிக்கும் வேலைகளுக்காக,

இயற்கை வள - விஞ்ஞான ஆராய்ச்சி மந்திரி காரியாலயம் 30கோடி ஒதுக்கிவைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்திய சர்க்கார் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நாடுமுழுவதிலும் மொத்தம் 125 விஞ்ஞான் மந்திர்களை (கிராம விஞ்ஞான நிலையங்கள்) அமைக்க உத்தேசித்துள்ளனர்.

வேலைத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக, மத்திய சமூக க்ஷேமநல போர்டு ஏற்படுத்தியுள்ள 259 கமிட்டிகளுக்குத் திட்ட நிலையங்களுக்கான கட்டடங்களை நிர்மாணிப்பதற்காக போர்டு மொத்தம் 8,96,000 ரூபாய் வழங்கியுள்ளது.

இந்தியாவின் வன வளத்தைப் பெருக்குவதற்காக இரண்டாவது திட்டத்தின்கீழ் மொத்தம் 24கோடி செலவிடத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

---



சிறந்த சூழ்நிலையில் அமைக்கப்பட்டுள்ள ரயில்வே ஆஸ்பத்திரிஒன்றின் உட்புறக் காட்சி ஒன்றைப் படத்தில் காணலாம்

## சிவபதமடைந்தார்கள்

நம் நகரில் இல்லையென்றிரப்போர்க்கு இல்லையென்னாது ஈந்துவந்த திரு, சி.மு. அரு. ராம. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் 8-5-56 பகல் 12-மணிக்கு மதுரையிலுள்ள தமது இல்லத்தில் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் திருவடியை அடைந்தார்கள். அவர்கள் நல்லுயிர் பேரின்பத்தில் அமைதி பெறுக.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-33
துன்முகி-வைகாசி - 18
31-5-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## மருதம்

*பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் வாயில் பெருஞய்த் தலைவியின் ஊடல் தணியும்படி பாணனை நெருங்கிக் கூறியது.*

நகுகம் வாராய் பாண பகுவா, யரிபெய் கிண்கிணி யார்ப்பத் தெருவிற்,
றேர்நடை பயிற்றுந் தேமொழிப் புதல்வன், பூநாறு செவ்வாய் சிதைந்த
சாந்தமொடு, காமர் நெஞ்சந் துரப்ப யாந்தன், முயங்கல் விருப்பொடு
குறுகினே மாகப், பிறைவனப் புற்ற மாசறு திருநுத, ஞறிருங் கதுப்பி
னெங் காதலி வேறுணர்ந்து, வெரூஉமான் பிணையி ஞெரீஇ, யாரை
யோவென் றிகந்துநின் றதுவே. **250**

:-மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்

*பாணனே! வருவாயாக. பகுத்த வாயின் வழியே பரலிடப் பெற்ற கிண்கிணியொலிப்பத் தெருவிலே சிறுதேரைப் பின்பற்றி நடைபயிலுகின்ற இன்பமொழியையுடைய புதல்வனை அவனது மலர்போலத் தோன்றும் சிவந்த வாய்நீரொழுகுதலால் சிதைந்த சந்தனப்பூச்சோடு விருப்பமுள்ள மனந்துரப்ப யாம் அவனை முயங்கும் விருப்பத்துடன் அருகிற்செல்லப்பிறைத் திங்களைப் போன்ற அழகுபொருந்திய குற்றமற்ற சிறந்த நெற்றியையும் மணங்கமழும் கூந்தலையும் உடைய எமது காதலி வேறாகக் கருதிப்பிணைமானைப் போல வெருண்டு அயலிற் சென்று நீ யாரோ வென்று இகழ்ந்து நின்றதை நினைந்து நகுவோம்.*

பாலகவி

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

அம்மட்டிற்ருன் அது சரியாகும். நாத்திக நாடுகளிலுங்கூட அவரை மதித்து மரியாதை செய்வதுண்டு. ஆனல் அவருக்குக் கோயில்கட்டி அவரைத் தெய்வமெனக் கொண்டு வழிபட வேண்டுமென நவீனர் பிரசங்கிப்பது நாட்டைக் கெடுக்கவே செய்யும். சாஸ்திரோக்தமான உண்மைக் கடவுள்வணக்கமுறை மக்களுள்ளத்திற் புகாதபடி வழியடைக்குங் கல்லே அப்பிரசங்கம். அம்முறையை யோராமல் மனம்போனபடி அற்ப தெய்வங்களைக் கற்பித்து வணங்கி வரும் பாமரமக்கள் பாமரமக்களாகவே வாழ்ந்தொழியுமாறு செய்கிற மருளுரையே அப்பிரசங்கம்.

ஒருவனுக்குச் சிறப்பு எந்த அளவி லிருக்கிறதோ அந்த அளவிற்ருன் அவனை மதித்து மரியாதை செய்ய வேண்டும். அவனிட மில்லாத சிறப்பையும் தம் அறியாமையாலோ, தாம் அவன்மேல் வைத்த அபிமானத்தாலோ அவன்பால் ஆரோபித்துப் பிரசாரபலத்தால் அவனை மிதமிஞ்சி மதித் துரைப்பவர் சாமானிய மக்களை வஞ்சிப்பவராவார். தெள்ளறிஞர் அதைக் கண்டிக்கவே வேண்டும். மக்களின் அறிவைத் தூய்மை செய்வதே மேலான சேவை. பதியியலை யறிந்துகொள்ளாத பிராகிருதர் எந்நாட்டிலும் எக்காலத்திலுமுளர். அவர் இலௌகிகத்தில் மேல்நிலை பெறுதலுங் கூடும். அவர் பதியைப் பசுவென்பார், பசுவைப் பதியென்பார். 'தேவர் மூவரும் வானில் வலம் வந்து செஞ்சொற் புலவனை யஞ்சலிசெய்தனர்' என்பதொரு பாட்டு. அது இசைத்தட்டிலும் அமைத்துஇராகதாளங்களோடு நாடெங்கும் பாடப்பட்டு வருகிறது. அதிலுள்ள தேவர் மூவராவார் பிரம விஷ்ணு ருத்ரர். செஞ்சொற் புலவனுவான்தேசிய கவியாகிய பாரதி. அம்முத்தேவரும் அப்பாரதியைக் கைகூப்பிப் பிரதக்கிணஞ்செய்து வணங்குகின்றனராம். எட்டயபுரத்திற் பாரதியின் ஞாபகார்த்தக் கட்டடத் திறப்புவிழா நடந்தபோது

அந்நிகழ்ச்சிகள் வெளியான 'கல்கி'யின் முகப்பட்டையில் அவ்வர்ணப்படமும் தீட்டப்பட்டுள்ளது. அது மாத்திரமா? காந்தியாரும் விஷ்ணுவினவதாரமெனப் பேசப்பட்டார். இப்படிப் பிரும்மங்களும், பகவான்களும் ஆக்கப்பட்ட மக்கள் பலர். தமிழகம் உள்பட பாரததேசத்துச் சமயத்தவரிடந்தான் இப்படியான தெய்வங்களும் உருவாயின. 'கண்ணப்ப னொப்பதோரன்பின்மை' என்றது போல் இத்தேசத்தில் வேதசிவாகமாதி மெய்ஞ்ஞான நூல்கள் பெருகிக் கிடக்குமளவுக்குத் தெய்வவியல்பை யறிந்தொழுக மாட்டாத ஞானசூனியமு மிருந்து வருகிறது. மேலிடத்திலிருந்து கீழிடம்வரை பலரிடம் அதைப் பார்க்கலாம். சென்னை ராஜ்ய மந்திரிமாரா யிருப்பவர் ஒருவர் 'வழிபாட்டு உருவங்களை உடைப்பதைப் பற்றிக்கூட எனக்கு அவ்வளவு கவலை இல்லை. ஆனால் தேசியக்கொடியை எரிப்பதை நான் சகித்துக் கொண்டிருக்க முடியாது. ஏனெனில் உயிருள்ள தெய்வங்களாகிய இந்நாட்டு மக்களின் சின்னம் அது' (7-8-55 தமிழ்நாடு) என்கிறார் வழிபாட்டுருவங்கள் உயிரில்லாத தெய்வங்களின் சின்னமா? உடைக்கப்பட்ட உருவம் விநாயகருடையது. அவர்செத்த தெய்வம்போலும். அம்மந்திரியின் சகாவாகிய மற்றொரு மந்திரி 'தேசம்,சமுதாயம்,கடவுள் எல்லாம் ஒன்று என்ற அடிப்படையில்தான் இந்தப் பிரார்த்தனை அமைக்கப்பட்டுள்ளன' (31-1-56 சுதேசமித்திரன்) என்கிறார் சென்னை அசெம்பிளியிற் கேட்கப்பட்டதொரு கேள்விக்கு அவர் தந்த விடை அது. அவ்வசெம்பிளியிலுள்ள அங்கத்தினருள்எவருக்கும் அதைக் கண்டிக்கத் திறமும் அவசியமும் இல்லாமற் போய்விட்டன. தேசம் சிருட்டிக்கப்பட்டதொரு சடப்பொருள். சமுதாயம் சிற்றறிவுடைய பசுக்களாகிய மக்களின் தொகுதி. கடவுள் அவ்வுலகைச் சிருட்டித்து அம்மக்களை அதிற் போக்குவரவு புரிவித்து அவரறிவைப் பதப்படுத்தி முடிவில் அவர்க்குப் பேரின்பத்தைக் கொடுக்கிற பேராற்றல், பேரறிவு, பேருருள் முதலிய அனந்தகல்யாணகுணங்களையுடைய முழுமுதற்பொருள். அறிவற்ற சடமாகிய தேசமும், அற்ப அறிவுடைய சமுதாயமும், பேருபகாரியாகிய கடவுளும் ஒன்றாகுமா? இம்மந்திரிகள்போன்ற புத்திசாலிகள் அக்காலத்திலும் இருந்திருப்பார். கவினர் சொல்வது உண்மையா

னுல் நடுகறகள் சிலவற்றைச் சிவன்கோயில்களாக்கியவர் அப் புத்திசாலிகள்தான். சைவசமய விதிநூலாகிய சிவாகமப்படி கட்டப்பட்டுள்ள சைவாலயங்கள் அவற்றிற்கு வேருகும். அவ் வேறுபாட்டைக் கண்டறிவதே பகுத்தறிவு. அதைவிட்டுச் சைவாலயங்களும் நடுகற்கோயில்களேயெனப் பேசுவது அறிவுடைமையன்று.

சிவன் சர்வவியாபகர். அவரைக்குறித்து உருவ வணக்கஞ் செய்யப்படுவதால், கருத்தறிந்து முடிக்கவல்ல அப்பரமனுர் அப் படிவணங்குவோருக்கு அவ்வுருவங்களிலுந் தங்கி உபகரிக்கவே செய்வர். அவரடியாரையும் அவராகவே பாவித்து வணங்குக வென்பது சைவசமயவிதி. அவ் வணக்கத்தையும் அவரே ஏன்று கொண்டு அருள்புரிவர். ஆனுல் நவீனர் கூறும் அவ்வீராதியோருக்கு உருவ வணக்கமும் கோயில்களும் ஏன்? அவர் செத்தபிறகு அவ்வுருவங்களில் வந்து தங்குவாரா? தம்மை வணங்குவார்க்கு அவர் அருள் புரிவாரா? அவ்வருள் தான் யாதோ? நாத்திக வீரரும், நாத்திகவொழுக்கமுடையவரும், நாத்திகபத்தினிகளும் தமக்கு உடம்பன்றி உயிரென வொன்றிருப்பதாகக்கொள்ளார். அவர் செத்தால் சர்வசூனியராய்விடுவரென்பதே அவர் கருத்து. அவருக்குக் கல்நடுவது பித்தம். சிறு தெய்வ வணக்கம் மக்களறிவுக்கே கறைதான். தமிழகத்திலாயினுஞ் சரி, தொல்காப்பியர் காலத்திலாயினுஞ் சரி, படித்தவர் கூட்டத்திலாயினுஞ் சரி அக்கறை கறையே. தமிழகம் தூய்மைபெற வேண்டுமாயின் அக்கறையைப் போக்கியே தீரவேண்டும். அக்கறையைப் போக்கித் தமிழகத்தைச் செம்மைப்படுத்தியது சைவசமயமொன்றே. 'சென்றுநாஞ் சிறு தெய்வஞ் சேர்வோமல்லோஞ் சிவபெருமான் திருவடியே சேரப்பெற்ருேம்' என்றது திருமுறை. அவ்வறிவுரை பிறந்த பிறகும் அநாகரிகமாகிய சிறு தெய்வ வணக்கத்தை நவீனர் ஆதரிக்கிருர். சைவத்தை அவர் தான் வளர்ப்பாரா? அவ்வணக்கந்தான் வளர்க்குமா?

'தமிழர் லிங்க வணக்கமும், வடவர் உருத்திரவணக்கமும் அவ்வாறே முல்லை நிலத்தார்க்குரிய திருமால் வணக்கமும், வடவருடைய விஷ்ணு வணக்கமும் கலப்புற்ற காலம் முதல்' (14-8-55 தமிழ்நாடு) என்கிருர் நவீனர். அக்காலம் எது? அதை

அவர் சொல்லவில்லை. அதுகிடக்க, அக் கலப்புண்மைக்குச் சைவ வைணவ சமயப் பிரமாண நூல்களில் எள்ளத்தனையாதாரமுங் கிடையாது அவர் சொல்வது உண்மையானல் தமிழர் அவ்விலிங்கத்தை யமைத்துக்கொண்டது தன்மனம் போனபடியா? ஏதேனுமொரு பிரமாண நூலின்படியா? மனம் போனபடியெனின், அதை யமைத்துக்கொடுத்த முதற்றமிழன் எவன்? பிரமாண நூலின் படியெனின், அந் நூல் எது? அவன்பெயரையும், அதன் பெயரையுங் கண்டுகூற முடியவில்லை யென்கிருரவர். அதனுல் இலிங்க வணக்கந் தமிழருடைய தன்றென்பதே மெய்யாகும். தொல்காப்பியத்திலும், சங்கநூல்களிலும், லிங்கப் பிரஸ்தாபங்கிடையாது. லிங்கமென்ற பதமே சங்ஸ்கிருதம். ஆகலின் அக்காலத் தமிழர் இலிங்கமில்லாதவர், அவ்வணக்கமின்றியேயிருந்தன ரென்பதுபெறப்படும். உருத்திர வணக்கம் தமிழ்நாட்டுக்கு வந்தேறிய தொன்றென்றுர் நவீனர். அப்படியானல் இலிங்கமும் வடநாட்டிலிருந்து வந்ததுதான். அந் நவீனருக்கு முன்னேடிகளுஞ் சிலருளர். அவர் சிவ வணக்கமும் வடக்கிலிருந்துவந்ததென்றே சொல்வர். எப்படி? மாணிக்கவாசகர் தோன்றி இற்றைக்கு ஓராயிரத்து எழுநூறு ஆண்டுகளாயின; அவர் காலத்துக்கு முன் இத்தென்றமிழ் நாட்டில் சிவனென்ற தெய்வப் பெயரோ, அதுபற்றிச் சைவமென்ற சமயப் பெயரோ கிடையாது; இப்போதுள்ள ஆங்கிலோ இந்தியரென்ற கலவையினம்போல் அக்காலத்திருந்த திராவிட ஆரியரென்ற கலவையினத்தைச்சேர்ந்ததும், சைவப் பற்றுடையதும் ஆகியதொரு குடும்பம் தன் பண்டைநாடாகிய வடுகநாட்டிலிருந்து இத்தமிழ்நாட்டிற் குடியேறியது; அக்குடும்பத்திற்பிறந்தவரே மாணிக்கவாசகர்; கலவைப் பிறவியினராகிய அவ் வடுக மாணிக்கவாசகர்தான் சிவனென்னுஞ் சொல்லைத் தம் வடுக நாட்டிலிருந்து இத் தமிழ்நாட்டிற் கொணர்ந்து தாம் பாடிய திருவாசகந் திருக்கோவையார்களிற் புகுத்திப் பரப்பினுர்; அவ் வடுகர் செய்த அவ்விரு நூல்களுமே இத்தமிழ் நாட்டுச் சைவத்துக்கு ஒப்புயர்வில்லாத தனித் தமிழ்மாமறைகள்; அவ் வடுகரே இத்தமிழ்நாட்டுச்சைவ சமயத்துக்கு முதலாசிரியருமாவார் என்பது மறைமலையடிகள் கண்ட சரித்திர வாராய்ச்சி முடிவு.

(தொடரும்)




செந்தமிழ்ப் பூம் பொழில்: தருமபுர ஆதீன வெளியீடு எண்365. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் 17-5-45முதல் 6-2-56வரை அருளிய அருளுரைகளில் ஐம்பத்தொன்றின் தொகுப்பு இது. 24வது குருமகாசந்நிதானத்தின் (18-5-56) குருபூசை விழா மலராக வெளியிடப்பெற்றது. ஞானபீடத்தில் எழுந்தருளி அருளாட்சி செய்து வரும் நமது குருமகாசந்நிதானத்தின் அருளுபதேசங்கள் மேலும் தொடர்ந்துவெளிவர இருப்பது வரவேற்பதற்குரியதாகும்.

அம்மையார் திருமுறை: திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடு. ஸ்ரீலஸ்ரீ ஆதி குமர குருபர சுவாமிகள்268ம்ஆண்டு நினைவு மலராக (27-5-56) ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்கள் திருவுளப் பாங்கின்படி ஸ்ரீமத் இளவரசு சுவாமிகளவர்களால் வெளியிடப்பெற்றது. காரைக்காலம்மையார் வரலாறு துதி ஆகியவைகளுடன் அம்மையாரது பிரபந்தங்கள் குறிப்புரையுடன் இதில் இடம்பெற்றுள்ளன.

மதுரைச் சிலாசாசனத் திருமுறை: ஸ்ரீகாசிமடத்து வெளியீடாகக் குமரகுருபர சுவாமிகள் ஆண்டு நினைவு மலராகச் சிவதர்மபாஸ்கரம க சுந்தரேசப் பட்டரவர்களால் வெளியிடப் பெற்றது. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவர்கள் மதுரைத் திருக்கோயிலில் நிறுவியுள்ள சிலாசாசனத் திருப்பாடல்கள் இதில் இடம்பெற்றுள்ளன.

தில்லைச் சிற்றம்பலவன்கோயில் வரலாறு: ஆக்கியவர் ஜே. எம் சோமசுந்தரம் பிள்ளை பி ஏ பி எல் அவர்கள், அண்ணமலைப் பல்கலைக்கழகம். அண்ணமலை நகர். விலை அணு 12- தஞ்சாவூர் பழநி, திருச்செந்தூர்த் திருக் கோயில்களின் வரலாறுகள் முதலியவற்றை எழுதி வெளியிட்டுச் சைவநன்மக்களின் பாராட்டுதலைப் பெற்றுள்ள திரு, பிள்ளையவர்கள்| தல அமைப்பு என்ற தலைப்பில் தொடங்கி வழிபாட்டிற்குரிய புகழ்ப்பாக்கள் என்ற தலைப்பில் நிறைவுசெய்து பல அரிய பொருள்களைச் சுருக்க

மாகவும் விளக்கமாகவும் இதில் வெளியிட்டிருக்கிறார்கள். படங்கள் நிறைந்த இப்புத்தகம் ஒவ்வொருவரிடத்திலும் இருக்க வேண்டியதாகும். வேண்டுவோர் ஆசிரியருக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

## திருப்பனந்தாள்

ஸ்ரீலஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகளின் 268ம் ஆண்டுக் குருபூசைவிழா ஸ்ரீ காசிமடத்தில் 27-5-56ல் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. வைகறைப்பொழுதில் ஸ்ரீசொக்கலிங்கப் பெருமானுக்கு விசேட பூசைவழிபாடுகள் நிகழ்ந்தன. நண்பகலில் சிறந்தநாதசுரவித்துவான்கள் வாத்தியஇசை முழக்க ஸ்ரீகுமரகுருபர சுவாமிகளுக்குப் பூசைவழிபாடும்பின்னர் மகேசுர பூசையும் நடைபெற்றன. புலவர்களுக்கு வரிசைகள் வழக்கம்போல் வழங்கப்பெற்றன. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான்சுவாமிகள் அவர்களும் இளவரசு ஸ்ரீலஸ்ரீ மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்களும் அனைவருக்கும் பேட்டி கொடுத்து ஆசிர்வதித்தார்கள்.

## ரயில்
## கால அறிவிப்பு

| நம் | தேவகோட்டை ரஸ் | காரைக்குடி வரு | புறப் |
|---|---|---|---|
| | **மானாமதுரைக்கு.** | | |
| 629 | 5-2 | | 4-55 |
| R C | 6-25 | 6-8 | 6-11 |
| 601 | 8-41 | 8-24 | 8-34 |
| R C | | 9-50 | |
| 657 | 15-7 | 14-35 | 15-0 |
| R C | | 17-10 | |
| 653 | 17-27 | | 17-20 |
| RC | 20-14 | 20-0 | 20-3 |
| 607 | 1-3 | 0-48 | 0-56 |
| | **திருச்சிராப்பள்ளிக்கு** | | |
| 785 | 3-57 | 4-15 | |
| R C | 6-35 | 6-42 | 6-57 |
| 630 | 9-26 | 9-42 | |
| R C | | | 10-10 |
| 658 | 11-59 | 12-9 | 12-17 |
| RC | | | 17-30 |
| 602 | 17-55 | 18-20 | 18-28 |
| RC | 20-24 | 20-31 | 20-46 |
| 608 | 0-38 | 0-54 | 1-4 |
| | **மாயூரத்திற்கு** | | |
| 645 | | 10-55 | —— |
| 625 | | 14-52 | —— |
| 639 | —— | 22-25 | —— |
| 636 | —— | —— | 4-25 |
| 640 | | —— | 11—— |
| 626 | | | 15-5 |

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி வைகாசி - 18

## புத்தருக்கு வந்த யோகம்.

கடைசிவரை கடவுளுணர்ச்சி யில்லாது காலத்தைக் கழித்துச் சென்றவர்களில் புத்தரும் ஒருவர். அவரது உபதேசங்களெல்லாம் உலகத்தில் மனிதன் நேர்மையாக வாழ வேண்டுமென்பது குறித்து எழுந்தவைகள் தாம். இது, நமது நாட்டு வைதீக சமயங்களில் பால பாடமாகப் போதிக்கப்பெற்று வருவது.

புத்தரது இறுதிவேளையில் அவருடன் இருந்த அவரது சீடர்களிற் சிலர், அவர் பிரிந்து போவதற்கு முன், கடவுளைப்பற்றிய அவரது கருத்தை அறிந்துகொள்ளவேண்டுமென்று கருதி அவரிடம் அது பற்றிக்கேட்டார்கள். அந்த வேளையில் அவர் சொல்லியது 'ஆண்டவனைப் பற்றி எனக்கு அக்கரை இல்லை' என்பதுதான்.

இவ்வாறு கடவுளுணர்ச்சியே யில்லாதுவாழ்நாளைக்கழித்த புத்தர், நிலையாமையை உணர்ந்துஒழுகினரென்ற ஒன்றினாலேயே மதத் தலைவராகும் தகுதியைப்பெற்றார். நில்லாத உலகியல்பைக் கண்டறிந்த அவர், நிலைத்த இறையியல்பில் தலைப்பட முயலாத பெருங் குறையை உடையவராய் இருந்

தமையால். அவரது கொள்கை சமயகுரவர்களாலும், சந்தான குரவர்களாலும் கண்டித்து ஒதுக்கப் பெற்றது.

வைதிக நெறியின் வழியே ஒழுகாத எந்தச் சமயமும், பெறவேண்டிய முடிந்த பயனைப் பெருது என்பதை முறையாகச் சாத்திரங்களைக் கற்றறிந்த சான்றோர் அறிவர். கடவுளை மறந்து உலகியலில் நேர்மையாக நடந்து வருகின்ற எவனும், பெரியவனுக ஆகமுடியாது'

பெரும்பேறு பெறக் காரணமாயிருக்கிற கடவுளுணர்ச்சியை மக்களிடமிருந்து ஒழித்துச் சென்றவர்களில் ஒருவராகிய புத்தர் துறவு அடைந்து **2500** ஆண்டுகள் ஆகின்றனவாம். அதனுல் அவரது விழா மதச்சார்பற்ற இந்திய அரசாங்கத்தினுலும் பல லட்சக் கணக்கான ரூபாய்கள் செலவில் கொண்டாடப்பட்டது. ஐயோ! இது என்ன வெட்கக்கேடு!

பெரிய மதநூற்புலவரான டாக்டர் இராதாகிருஷ்ணன் முதல் கடவுளைப்பற்றி இன்னும் சரியான முடிவுக்கு வராத ஸ்ரீநேரு வரை அனைவரும் இவ் விழாவில் பங்கெடுத்துக்கொண்டார்கள். பெரிய-பெரிய-பெரிய மனிதர்கள் எல்லோரும் பாராட்டிக்கொண்டாடிய இவ் விழாவைப்பற்றி நாம் சொல்லுவதென்னவென்ருல், அமாவாசைக்கும் அப்துல்லா ராவுத்தருக்கும் உள்ள சம்பந்தம் போன்றதே இந்தியநாட்டிற்கும் புத்தர்விழாவிற்கும் உள்ள சம்பந்தம்' என்பது தான்

'மதச்சார்பற்றது' என்றுதன்னை விளம்பரப்படுத்திக்கொண்ட இந்தியஅரசாங்கம்புத்தர்விழாக் கொண்டாட - அதற்காக ஏழை மக்களின் பொருளை லெட்சக்கணக்கிற் செலவிட என்ன நியாயம் இருக்கிறது? அரசாங்கம்தான் இவ்வாறு முறையற்று ஈடுபடுகிறதென்ருல் பொதுமக்களில்-பத்திரிகை ஆசிரியர்களில் எத்துணைபேர்இதைப்பற்றிச் சிந்தனைசெய்து உண்மையை வெளியிட்டார்கள்?

இவ்வாண்டு வைசாக பூர்ணிமையில் சந்திரகிரகணம் வந்தது. சந்திரகிரகணநாளில் புத்தர் விழாக்கொண்டாட்டம்நிகழ்ந்திருக்கிறது. இதுவும் புத்தரின் பரிசுத்தத் தன்மையை அறிவிப்பதுதான் போலும்!

## திருமுறை நினைவுநாள்

மதுரை மே 27-

ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவாக மதுரையில் ஸ்ரீ காசி மடத்தின் சார்பில் இன்று திருமுறைவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவை மதுரை ஆதீனஇளவரசு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தொடங்கி வைத்தார்கள்.

மீனாட்சிகோயில் சந்நிதியிலிருந்து திருமுறைப்பாராயணஊர்வலம் புறப்பட்டு நான்கு ஆவணிமூல வீதிகளில் வலம் வந்தது. காஞ்சிபுரம், சிதம்பரம், தருமபுரம், திருவாவடுதுறை, திருப்பனந்தாள், சென்னை, புதுக்கோட்டை ஆகிய பல இடங்களிலிருந்துவந்த தேவார இசைவல்லுநர்கள் ஊர்வலத்தில்பங்கு கொண்டு தக்க பக்கவாத்தியங்களுடன் பாராயணம் செய்தனர்.

திரு, ஆறுமுகநாவலர் சொற்பொழிவாற்றினர். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித்தலைவர் திரு, கே எம் வேங்கடராமய்யா இவ்விழாவைச் சிறப்பாக நடத்திவைத்தார். இன்று பகல் இந்த நினைவுநாளை ஒட்டி அன்னம்பாலிப்பும் நடந்தது.

## சேக்கிழார் திருநாள்

தேவகோட்டைச் சேக்கிழார் திருநாட் கழகத்தின் 10வது விழா 10, 11, 12-6-56உகளில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் இளவரசு வித்துவான் ஸ்ரீ ல ஸ்ரீ மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகளவர்கள் தலைமையில் நடைபெறும். 12உ நாயன்மார்-சேக்கிழார் பெருமானுக்கு விசேட பூசைவழிபாடும் திருமுறை ஊர்வலமும் நிகழும். சொற்பொழிவு நிகழ்ச்சியில் "மதுரை ஆதீனச் சைவசித்தாந்தப் புலவர் திருவாவடுதுறை ஆதீன வித்துவான், சித்தாந்தச் சொல்மணி, செஞ்சொற் சிங்கம் வீரசிவம் அவர்களும், திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் சைவசமய சண்டமாருதம் ஆறுமுக நாவலர் அவர்களும், அண்ணமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் சைவப் பேராசிரியர் ஜி. சுப்பிரமணியபிள்ளையவர்களும், மயிலம் செந்தமிழ்க்கல்லூரி முதல்வர் மயிலம் ஆதீன வித்துவான் சி. துரைசாமி ஐயரவர்களும் செல்வி, வயிநாகரம் இராம. மீனாட்சியும் இராம. திருநாவுக்கரசும் கலந்துகொள்வார்கள்

# சிவாலயங்களும் கொல்லா விரதமும்

நன்மை விருப்பன்

'ஆயும் இரவியும் ஒன்றே அனைத்துயிர்க்கும் ஆயுங்கால் ஒன்றே சிவம்' (ஔவை குறள்) எல்லா உலகங்களுக்கும் புற விருளைநீக்குவதற்குப் பௌதிக சூரியன் எப்படி ஒருவனே, அது போல எல்லா உயிர்களுக்கும் அகவிருளை நீக்குவதற்கும் உயிர்கள் வினைகளை அனுபவித்தற்கும் உயிர்க்குயிராகிய சிவம் ஒன்றே. இதனால் உண்மைக் கடவுள் சிவம் ஒன்றே எனவும் உபசாரக்கடவுள் பலர் இருக்கலாம் எனவும் அறிகின்றோம்.

எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளும், பிறப்பிறப்பில்லாதவரும், ஒப்புயர்வற்றவரும், உயிர்க்குயிராயிருந்து பிராரத்த வினைகளை ஊட்டுவிப்பவருமாகிய சிவம் என்றும் இயல்பாகவே தோன்றாத் துணையாயிருக்கும். அச்சிவத்தின் உதவியை அடைந்துள்ள, சீவகோடிகளில் சிற்சில உயிர்களைச்சிறுதெய்வங்களுக்குப் பலியிடுவதும்அவற்றின் மாமிசத்தை உண்பதும் பஞ்சமாபாதகங்களில் முதன்மையாகிய கொலைபாதகமும் சிவாலயங்களைச் சிதைத்த பாவமுமாகுமாகையால் இந்த உண்மையை உணர்ந்து அறவே விட்டுவிடும்படி செய்வீர்களாக.

'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லாவுயிருந்தொழும்' (வள்ளுவர்)

'கொல்லா விரதங் குவலயமெல்லாமோங்க எல்லார்க்குஞ் சொல்லுவ தென்னிச்சை பராபரமே'

'கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்றல்லாதார்யாரோ அறியேன் பராபரமே' (தாயுமானர்)

---

## தமிழ்ச்சங்கப் பொன்விழா

ப.துரைத் தமிழ்ச் சங்கத்தின் பொன்விழா 30-5-56 முதல் 5-6-56வரை நடைபெறும். ஒவ்வொருநாளும் காலை 9மணிமுதல் திருக்கோவில் வடச்கு-மேற்கு ஆடிவீதிகளில் இயலரங்கும் மாலை 6மணிமுதலும் இரவு 10மணி முதலும் தமுக்கம் மைதானத்தில் இசை நாடக

அரங்குகளும் நிகழும். மடாதிபதிகள், அமைச்சர்கள், அறிஞர்கள் முதலிய பெருமக்கள் விழாவிற் கலந்துகொள்ளுவார்கள்.

---

## நன்னெறி மன்றம்

இம்மன்றத்தின்சார்பில் சமயகுரவர் திருஞானசம்பந்த சுவாமிகள் குருபூசை விழா குமாரகோவில் குமார மடத்தில் வைத்து 27-5-56 ஞாயிற்றுக் கிழமைநடைபெற்றது.

காலை: துயிலெழுதல் மணி 4-30. திருப்பள்ளியெழுச்சி ஓதல், குரவர்வணக்கம் 5 முதல் 6வரை, நீராடல் 6முதல்7வரை, தியானம் 7முதல் 7-30வரை சிற்றுண்டி 7-30முதல்8-30வரை நன்மொழிகேட்டல் 8-30முதல் 9-30வரை, மௌனம்9-30முதல் 10-30வரை.பஜனை 10-30முதல் 11-30வரை, ஆலயவழிபாடு 11-30முதல் 12-30வரை

மாலை: உணவு ஓய்வுநேரம் 12-30முதல் 2-30வரை, புராணங்கேட்டல் 2-30முதல்3வரை நன்மொழிகேட்டல் 3 முதல் 4 வரை, பஜனை, அர்ச்சனை 4 முதல் 5வரை

## திருவள்ளுவர் திருநாள்

திருக்குறள் பாடித் தீந்தமிழ் வளர்க்கும் பணியில் கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கமும் 24-5-56 மாலை கலந்துகொண்டது.

கூட்டத்திற்குத் திரு, ஈ. சி. சாஸ்திரி தலைமைவகித்தார். திருமுநாராயணசுவாமியின் இறை வணக்கத்துடன் கூட்டம்துவங்கியது.

'வள்ளுவர் குறள் ஒரு வாழ்க்கை விளக்கம்' என்றதலைப் பின்கீழ் திருவாளர்கள்: வரதராஜய்யர், சிவ. ஜம்புநாதன் வி எஸ் வேங்கடராமன், வெ. அரிஹரன், கோவை வி தியாகராஜன் ஆகியோர் வள்ளுவரின் குறள் எப்படி வாழ்க்கையில் எந்தத்துறையில் இருப்பவர்களுக்கும் ஒரு விளக்கமாக அமைந்துள்ளது என்பது பற்றி விரிவுரையாற்றினார்கள்.

செயலாளர் கி சி ரா கிருஷ்ணன் நன்றிகூறினார். திரு ஓ வி சி சேகர் நாட்டுவணக்கம் பாடக் கூட்டம் இனிது முடிவுற்றது.

# புதிய தசாம்ச நாணயங்கள்

இந்தியாவில் தசாம்ச நாணயங்கள் 1957 ஏப்ரல் 1-ந் தேதியிலிருந்து செலாவணிக்குக் கொண்டுவரப்படும் என்று இந்திய சர்க்கார் இன்று வெளியிட்டுள்ள அறிவிப்பு ஒன்றிலிருந்து தெரியவருகிறது. புதிய நாணயங்கள் வெளியிடப்பட்டதிலிருந்து சுமார் மூன்று வருஷ காலம் வரை, தற்போதுள்ள நாணயங்கள் சட்ட பூர்வமாக மேலும் செலாவணியில்இருந்து வரும், அந்தக் காலத்தில் அந்த நாணயங்கள் செலாவணியிலிருந்து படிப்படியாக வாபஸ் பெறப்பட்டுவிடும்.

நாட்டில் தசாம்சநாணயத்தை அமுலுக்குக் கொண்டுவருவதை அனுமதிக்கிற 1955ம் வருஷத்திய இந்திய நாணய (திருத்த) சட்டம் 1957 ஏப்ரல் 1ந் தேதி அமுலுக்கு வரும் என்று அந்த அறிவிப்புக் கூறுகிறது. அந்தத் தேதியிலிருந்து ரூபாய் நாணயம் 100 சம பாகங்களாகப்பிரிக்கப்படும்; அந்த ஒவ்வொருபாகத்துக்கான நாணயமும் 'நயா பைஸா' (புதிய பைஸா)என்று அழைக்கப்படும். இவ்விதமாக 100 'நயா பைஸாக்கள்' கொண்டது ஒரு ரூபாய் ஆகும். ஒரு ரூபாயின் மதிப்பு தற்போதுள்ளதுபோலவே இருந்துவரும்.

1906ம் வருஷத்திய இந்திய நாணயச் சட்டத்தின் 6வது பிரிவின்கீழ் இன்று வெளியிட்டுள்ள மற்றொருஅறிவிப்புமூலம் புதிய நாணயங்களின் மதிப்புகள், அளவுகள், உருவஅமைப்புகள், உலோகக்கலப்பு விகிதாசாரம் ஆகியவை பற்றியவிவரங்களை இந்தியசர்க்கார் வெளியிட்டுள்ளனர். புதிய நாணயங்கள் பின்கண்டபடி இருக்கும்:- 1, 2, 5, 10, 25, 50, 100 நயா பைஸாக்கள்.

மேற்கண்ட புதிய நாணயங்களில் தற்போதுள்ள 2-அணா, 1அணா, அரையணா, காலணா நாணயங்களுக்குச் சரிசம மதிப்புள்ள நாணயங்கள் கிடையாது. ஆனால்அவைகளுடையஸ்தானங்

களில் முறையே 10நயாபைஸாக்கள் 5 நயாபைஸாக்கள், 2 நயா பைஸாக்கள், 1நயா பைஸா ஆகிய நாணயங்கள் இருக்கும்,

தற்போதிருந்துவருகிற கால் ரூபாய், அரைரூபாய்,ஒருரூபாய் நாணயங்கள், தற்போதைய நாணய முறைக்கும், புதிய நாணயமுறைக்கும் ஒருங்கே பொதுவாக, மேலும் இருந்து வரும். அதாவது பின்வரும் விகிதத்தில் இருக்கும்: 25நயா பைஸாக்கள் 4 அணுக்களுக்குச் சமம். 50 நயா பைஸாக்கள் 8 அணுக்களுக்குச் சமம். 100நயா பைஸாக்கள் 1ரூபாய்க்குச்சமம்.

புதிய நாணயங்களுக்கும் ரூபாய்க்கும் உள்ள சம்பந்தத்தைப் பொதுமக்கள் சரியானபடி புரிந்துகொள்வதற்கு வசதியாக இருக்கும்பொருட்டு அந்த நாணயங்களிலேயே அத்தகைய நாணயங்கள் எத்தனைசேர்ந்தால் ஒரு ரூபாய் ஆகுமென்று குறிப்பிட்டுக் காட்டவும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. 1நயா பைஸா நாணயத்தில் 'ரூபாயில் நூறில் ஒருபங்கு' என்ற வாசகம் (ஹிந்தியில்) பொறிக்கப்பட்டிருக்கும். இதுபோலவே 2, 5, 10, 25, 50, நயா பைஸாக்கள் ஒரு ரூபாய்களில் முறையே 1/50, 1/20. 1/10, 1/4, 1/2 பாகங்களாகும் என்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது.

புதிய நாணயங்களின் உருவ அமைப்புகளும் உலோகக் கலப்பும் பின்வருமாறு இருக்கும்:-

புதிய நாணயங்கள் எல்லாவற்றின் முன் பக்கத்திலும்அசோக ஸ்தம்ப சிங்க முத்திரை இருக்கும்; அதில் ஹிந்தியில் 'பாரத்' என்றும், ஆங்கிலத்தில் 'இந்தியா' என்றும் எழுதப்பட்டிருக்கும்,

புதிய நாணயங்கள் எல்லாவற்றின் பின்பக்கத்திலும் அந்த நாணயம் அச்சடிக்கப்பட்ட வருஷமும் அதன் மதிப்பு நயா பைஸா கணக்குப்படி எவ்வளவு என்பதும் சர்வதேச இலக்க வரிசையில் 1, 2, 3, 4, 5... வகையரா குறிப்பிடப்பட்டிருக்கும்

100 நயாபைஸா, 50 நயா பைஸா, 24நயாபைஸா ஆகிய நாணயங்கள் தனி நிக்கல் நாணயங்களாக இருக்கும்; 10, 5, 2, நயாபைஸா நாணயங்கள் செம்பு -நிக்கல் கலப்பு உலோக நாணயங்களாக இருக்கும் (செம்பு 75

சதவிகிதம், நிக்கல் 25 சதவிகிதம்) ஒரு நயாபைஸா வெண்கலத்தால் செய்யப்பட்டிருக்கும்.

புதிய நாணயங்கள், ரிசேர்வ் பாங்கு, ஸ்டேட் பாங்கு கிளைகள், கஜானாக்கள், உப-கஜானாக்கள் ஆகியவைமூலம் பொதுமக்களுக்கு வெளியிடப்படும் பொதுமக்களுக்குப் புதிய நாணயங்களை உபயோகிப்பதில் நல்ல பழக்கம் ஏற்பட்டு, போதியஅளவில் புதிய நாணயங்கள் புழக்கத்திற்குக் கிடைத்த பிறகு தற்போதைய நாணயங்கள் வாபஸ் பெறப்படும்; அப்படி வாபஸாவது வரையில் இப்போதுள்ள நாணயங்கள் 1957 எப்ரல் 1-ந் தேதிக்குப் பிறகும்கூட செலாவணி நாணயங்களாகவே இருக்கும். இந்த நாணயங்களை வாபஸ் செய்து முடிப்பதற்கு சுமார் மூன்று வருஷகாலம் பிடிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆகவே புதிய நாணயங்கள் செலாவணிக்கு வரும்போது தற்போதைய நாணயங்களின் அந்தஸ்து என்ன ஆகிவிடுமோ என்று யாரும்பீதியடையவேண்டிய அவசியமே இல்லை.

தற்போதைய நாணயங்களுக்குச் சரிசமமான புதிய நாணயங்கள் எவை என்பதைத் தெரிந்துகொள்வதற்காக நாணய மாற்று அட்டவணைகள் பெருமளவில் வினியோகிக்கப்படும்; தற்போதைய நாணயங்கள் குறிப்பிட்ட தொகைக்குப் புதிய நாணயங்கள் எவ்வளவு உண்டு என்பது அதில் முழு நாணயக்கணக்கில் வடிவாகக்கணக்கிட்டுக்காட்டப்பட்டிருக்கும். நாணயங்களாகவே கொடுத்து லேவாதேவி நடத்தப்படுகிற விஷயத்தில் இந்த அட்டவணை உபயோகிக்கப்படும்; மற்றப்படி கணக்கு வைக்கவேண்டிய விஷயத்தில் 192 பைஸாக்களுக்கு 100 நயா பைஸாக்கள் வீதம் கணக்கிடப்படும்.

## குற்றாலம்

குற்றாலத்தில் சீசன் (சாரல்) தொடங்கியிருக்கிறது இங்குள்ள பெரிய நீர்அருவியில் சென்ற வாரத்தில் மூன்றுநாட்கள் தண்ணீர்வந்தது. ஐந்தருவியிலும் தண்ணீர்வருகிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-34

துன்முகி-வைகாசி - 25

7-6-56

வியாழன் வெளியீடு

தேவகோட்டை

ஆண்டுச்சந்தா ரூ 4

வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்



## சேக்கிழார் திருநாள்

துன்முகி வருடம்
வைகாசி மாதம்
30-ந் தேதி
12-6-56
செவ்வாய்க்கிழமை

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல்ல வல்ல பிரானெங்கள்
பாக்கி யப்பய னாப்பதி குன்றைவாழ்
சேக்கி ழாரடி சென்னி இருத்துவாம்

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

அதனை எழுதிய 'தமிழர் மதம்' என்ற சுவடியிற் காண்க. அதனால் தமிழ்ச் சைவரின் மானங் காப்பாற்றப்படுகிறதா? அவர் சுவடிகளில் அன்ன அபத்தங்கள் பல. அவை கிடக்க, ஓராயிரத்து எழுநூறு ஆண்டுகளுக்குமுன் இத்தமிழ்நாட்டில் சிவநாமமே வழங்கப்படவில்லையென்றால் சிவலிங்க வணக்கம் இல்லையென்பதே தீர்வு. இந்நாட்டில் உருத்திர வணக்கம் வந்தேறிய தொன்றோ, மற்றைப் பிரதேசங்களிற்போல் தொன்று தொட்டுள்ளதோ எங்ஙனமாயினும் லிங்கமாவது உருத்திரலிங்கமே அல்லது அதிற் சிறிதும் வேறல்லாத சிவலிங்கமே. அவ்வணக்கத்திற் பேதங் காண்பது பேதைமையே.

மேலும் தமிழகத்தில் அக்கலப்புக்கு முந்திய லிங்க வணக்கத்தாற் பேறெய்தியவர் யார்? ஒருவர் பெயரையாவது நவீனர் கூறவல்லரா? அன்றியும் அவர் கூறும் இலிங்கவணக்கத் தந்து கொண்டிருந்த நலனை அக்கலப்பு வணக்கம் அதிகப்படுத்தியதா? கெடுத்ததா? அதிகப்படுத்தியதெனின், உருத்திர வணக்கத்தைக் கொணர்ந்த வடவரை அந்நவீனர் போற்றவே வேண்டும். கெடுத்ததெனின் பின்வந்த சம்பந்தாதி சைவாசிரியன்மார் அக்கலப்பைக் கண்டு, அவ்வுருத்திர வணக்கத்தைப் பிரித்து அதன் நிழல் தானும் இல்லையாம்படி தொலைக்குந் திறமின்றி ஏமாறினரென்றே அந்நவீனர் சொன்னவராவர். அந்நவீனரைச் சைவ சமயத்துக்குப் புல்லுருவிகளென்னாதுவேறென்னென்பது? திருமாலும் விஷ்ணுவுங் கலந்தனரென்பதும் அபத்தப் பிரசங்கமே, அதனையும் ஆராய்ந்தறிக. இத்தகைய சரித்திரச் சுவடிகளையெல்லாம் முதலிற் புடமிட வேண்டும். அதுவே சைவ சமயத்துக்குச் செய்யப்படும் ஆரம்ப சேவையாகும்.

'(சிவன்) தேவாதி தேவனாய்த் திகழ்கிறான்... நான்முகனுக்கு நாதனாய் இருக்கிறான்

...திருமாலினுள்ளம் திணிந்து நிற்கிறுன். சிவன் வேறு விஷ்ணு வேறு என்று சைவர்கள் கருது வதில்லே. இருகடவுளும் ஒன்றே என்று சைவசித்தாந்தமும் முழங்குகிறது' (20-11-55தமிழ் நாடு) என்கிருர் நவீனர். நாதனு யிருப்பவனே திணிந்தும் நிற் பான். திணிந்து நிற்பவனே நாதனுமாவான். ஆகலின் சிவன் நான்முகனுள்ளுந் திணிந்துநிற் கிருன், திருமாலுக்கும் நாதனு யிருக்கிருன் என அவரே சொன்னவராகிருர். அங்ஙன மாகச் சிவனும் விஷ்ணுவும் ஆண்டானும் அடியானுமாய் வேறுவேருகாமல் ஒருவரே யாதல்யாங்ஙனம்? சிவனும் நான்முகனும் ஒருவரே யெனச் சொல்லாமற் போனதேன்? அச் சிவன் அந்நவீனருள்ளுந் திணிந்து நின்று அவருக்கு நாதனு யிருக்கிருன், ஆகலின் அவனும் அவரும் ஒருவர்தானு? முன் சொன்னதற்குப் பின் சொன்னது முரணுவதையுணராமலே அவர் சாத்திரஞானம் பேசுகிருர். சிவன், விஷ்ணு, பிரமன், காடன், மாடன், காட் டேறிமுதலியோரெல்லாம் ஒருவ ரேயென்பது முழுமாயாவாதமெ ன்பதை அவரறிக. கொள்ளேன் புரந்தரன் மாலயன்வாழ்வு குடி கெடினும்' என்றது திருமுறை. சைவசித்தாந்தமாவது அதுவே. அந்நவீனரின் பொய்த்துறை யன்று. பொய்யுரைப்பதால் வரும் ஊதியம் அருவருக்கத் தக்கது. சிவபிரான் ஒப்புயர் வற்ற முழுமுதற் கடவுளே யென்பதை நிர்ணயிப்பதே 'அந்தமாதி' யென்னுஞ் சிவ ஞானபோதத் தொடர். அதற்கு மூலமாகிய 'ப்ரபுர் ஹர:' என்ற தையும் அவர் ஓர்க,

'சைவத்துடன் நான் வைண வத்தையும் வளர்க்க வேண்டு மென வரவேற்பில் கூறப்பட்டி ருந்தது. என்னைப் பொறுத்த வரையில் எவ்வித வித்தியாச மும் கிடையாது. எனவேதான் இந்த இயககத்திற்கு அருள் நெறிஇயக்கம் என்ற பொதுப் பெயர் ஏற்படுத்தப்பட்டிருக்கி றது. ஆகவே அருள்நெறிக் கூட்டத்தினர் வைணவத்தையும் வளர்ப்பார்கள் சைவம் வைண வத்திற்கு மட்டுமின்றி இந் நாட்டில் வந்த எல்லா இதர மதத்தையும் வாரியணைத்து இடங்கொடுக்கும் தன்மையதாக இயங்கி வருகிறது...சர்வத்தை யும் ஏற்கும்பரந்தமனப்பான்மை யுடையது சைவம்' (12-9-55 தினமணி) என்கிருர் நவீனர். சைவரின் துணையின்றியே வைணவர் தம்சமயத்தைவளர்த்

துக்கொள்ள வல்லார். இன்றைய நிலையில் சைவ சமூகத்திலேயே வைணவ வாடையும் இதர சமயங்களின் வாடையும் வீசுமளவுக்குச் சைவமணங் கமழவில்லை அதுமானக்கேடென்ற உணர்ச்சி அச்சமூகத்தைவிட் டகன்றது. ஆயினும் அவ்வாவேற்பில் அந்நவீனரின் சகாயத்தை அவர் ஏன் நாடினர்? இன்னுங் கிடைத்தவரை இலாபந்தான் என்பது அவர்கருத்து. அந்நவீனரும் அதற்கிசைந்தார். சைவக் கற்பினராயின் அவர் இசைவாரா? மாட்டவே மாட்டார். களையையும் வளர்த்துப் பயிரை வளர்க்க முயலும் உழவரவர். தம்மைப்பொறுத்தவரை அவர் எவ்வித வித்தியாசமுங்கிடையாதென்றார். அவரது சொந்த அபிப்பிராயம் யாருக்கு வேண்டும்? சமயப்பிரசாரத்தில் எவருடைய சொந்த அபிப்பிராயமும் மதிக்கப்படாது. சைவ சமயப் பிரசாரகராயுள்ளவர் அச்சமயங் கொண்டுள்ள அபிப்பிராயத் துக்கே முக்கியத்துவங் கொடுத்துத்தம்மபிப்பிராயத்தை யடக்கி வைப்பதே நியாயம், ஆனல் அந்நவீனர் தம் சொந்த அபிப்பிராயத்தை அடிப்படையாகக்கொண்டுதான் தம் அருள் நெறியியக்கத்தைத் தொடங்கி நடத்துவதாகச் சொல்லுகிறுர். அழிந்தபிறகு அண்ணனுலென்ன? நம்பியானுலென்ன? சைவத்தோடு வைணவத்தையும் வளர்க்கவந்த அவ்வியக்கம் கிறிஸ்தவ இசுலாமிய மாதியவற்றை மாத்திரம் வளர்ப்பதை விட்டுவிடுமோ? விட்டுவிடுவது நியாயமு மன்று, விட்டு விடுமென்பது நம்பத்தக்கது மன்று. சைவம் இந்நாட்டில் வைணவத்தையும், இதரமதங்களையும் வாரியணைத்து இடங்கொடுக் குந்தன்மையதாயும்சர்வத்தையும் ஏற்கும்மனப்பான்மையுடையதாயும் இருக்கிறதாமே. அதனுற் சைவத்துக்கு வரும் இலாபமென்ன? கௌரவமென்ன? அஃதில்லையானுல் அச்சமயஞ்செத்து விடுமா? அவ்விதர சமயங்களாவது அவ்வணைப்பையும் ஏற்பையும் எதிர்பார்த்தாவாழ்கின்றன? 'தன்னுயுதமுந் தன்கையிற் பொருளும் பிறன் கையிற் கொடுத்த பேதையும் பதரே' என்றது வெற்றிவேற்கை. அதுபோல் சைவமுந் தன்னிடத்தைப் பிறசமயங்களுக்குக் கொடுத்ததாயின் அதுவும் பதர்தான். இடங்கொடுத்ததற்குக் காரணம் பரந்த மனப்பான்மையன்று; சைவசமூகத்தின் ஏமாறியபுத்தியும், தொடை நடுக்கமும், சைவத்தைப் பலி கொடுத்தாயினுந் தமிழை வளர்ப்பதே

மேலென்ற சைவப் பிரசாரகர் பலரின் தமிழ்வெறியும், சனசமூகத்தில் மதிப்படைய வேண்டும் அதனிடமிருந்து ஊதியம் பெற வேண்டும் என்ற அவராசையுமே யாம். ஆகலின் சைவத்தைப்பற்றி அப்படி அவர் பேசியது அச்சமயத்தைப் புகழ்ந்ததாகாது பின்னை என்னை? அச்சமயம் அவர்சொன்ன போதத் தன்மையை யுடையதா யிருந்தால் தம் கூட்டத்துக்குச் சைவசமயத் திருக்கூட்டம் என்றே பெயரிட்டிருப்பர். அதுவே முழுக்கப் பொருந்தும். அதைவிட்டு அருள்நெறித்திருக் கூட்டமென்றுரவர். அருள் நெறியென்பதிற் காட்டிலும் சைவசமயமென்பதில் அப்போதத் தன்மைப் பொருள் குறைவென்பதே அவருட்கிடை. ஆகலின் ஆரிய சமாஜம், பிரம சமாஜம், சாயிசமாஜம், சமரச சுத்த சன்மார்க்கசங்கம் முதலியனபோல் அவ்வருள் நெறித் திருக்கூட்டமும் சைவ சமயத்துக்குப் புறம்பாயதொரு சமயமே யென்பதைச் சைவசமூகங் கண்டு அக் கூட்டத்தைவிட்டு விலகுவதே தக்கதென்க. அக் கூட்டத்தாலும் சைவ சமூகத்துக்கு எதிர்காலத்திற் பெருங் கேடு வரவிருக்கிறது. அச் சமூகம் அக்கேட்டைக் கேடென் றுணராமல் நல்லதென்றேற்றுத் தமிழ்வெறிவயப்பட்டு நாத்திகப் படுகுழியில் வீழ்ந் தொழிவதற் காகவே சைவத்தைப் புகழ்வது போல் மேற்கண்டவாறு பிழை படப் பேசினர் நவீனர்.[4]

'நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆகியோரைப்போலவே அவரு (பாரதியினு)டைய கவிதைகளிலும் தமிழ்க்கலாசாரமும் பண்பாடும் மிளிர்வதை நாம் காணலாம். ஆகையால் நாயன்மார்கள் ஆழ்வார்கள் ஆகியோரின் வரிசையில் வைக்கவும் பாரதிதகுதியானவரே (12-9-55தமிழ்நாடு) என்கிறார் நவீனர். கலையும் ஆசாரமுஞ் சேர்ந்து கலாசாரமாயின. அக் கலாசாரமாவது கலைவழித்தாகிய ஆசாரமோ? கலையும் ஆசாரமுமோ? கலையாகிய ஆசாரமோ? பிறவோ? நான் கலையும் ஆசாரமுமெனவே கொள்கிறேன். அங்ஙனமாயின் கலை, ஆசாரம், பண்பாடு ஆகிய மூன்றையுந் தமிழை முன் வைத்துப் பேசினர் நவீனர் எல்லா மொழிகளிலு மிருப்பது போலத் தமிழிலும் நாத்திகம் முதற் பலசமயங்க ளுள. ஆகலின் அம்மூன்றுஞ் சமயங்களை முன்னிட்டனவாய்த்தா னிருக்கமுடியும்

(தொடரும்)

# கலைகளும் மக்களும்

[நார்மன் ஸ்மித்]

சில ஸ்தாபனங்கள் இருக்கின்றன; அவை எப்போதும் இருக்கும் என்றும், அதுவும் அன்றி எப்பொழுதும் இருந்து வருபவை என்றும் எப்படியாவது உணர்த்திவிடக் கூடியவை. அத்தகைய ஸ்தாபனங்களில் வாஷிங்டனிலுள்ள தேசியக் கலைக்கூடமும் ஒன்றாகும்.

1941 மார்ச்சு 17ந்தேதி அது முதன்முதலாக ஆரம்பித்ததை நாம் தெளிவாக நினைவில்வைத்திருக்கின்றோம். ஒரு பிரத்தியேகக் கண்காட்சியுடன் 15-வது ஆண்டுவிழாவை அது சமீபத்தில் கொண்டாடியபொழுது மற்ற அமெரிக்க நகரங்களிலுள்ள மாபெரும் கலைக் கண்காட்சிச்சாலைகளுடன்ஒப்பிட்டுப் பார்க்கையில் நாட்டின் கலாசார வாழ்க்கையில் இடம்பெற்றுள்ள இது 15ஆண்டுகளாக நடைபெற்றுவருகிறது என்று வியப்பூட்டும் உணர்ச்சி உண்டாயிற்று.

அங்கு காட்சியில் இடம் பெற்றுள்ள கலைப்பொருள்களில் பல, நூற்றாண்டுகளுக்குமுன் ஏற்பட்டவையாகுமென்பது இத்தகைய உணர்ச்சி ஏற்படுவதற்கு ஒரு வகையில் காரணமாகும். கட்டிடத்தின் வெள்ளைப்பளிங்கு வெளிப்பாகத்தின் சிறப்பும் சாதாரணச் சூழ்நிலையை விட்டு கலைப்பொக்கிஷங்களின் அமைப்பைக் காட்டும் மாபெரும் வட்ட அறையும் இத்தகைய உணர்ச்சி ஏற்பட இன்னொரு காரணமாகும்,

அண்ட்ரூ, டபிள்யூ மெல்லன் அமெரிக்காவின் தலை நகருக்கு நன்கொடையாக அளித்தது தான் இந்தக் கலைக்கூடம். அவர் இந்நாட்டின் தொழில் பிரமுகர்களில் ஒருவரும் அப்போது கலைப்பொருள்களைச்சேகரிப்பவர்களில் ஒருவருமாக இருந்தார். அவருடைய கட்டடம் கட்டுவதற்கு நிலம் தோண்டப்பட்டவுடன் மெல்லன் இறந்தார். அதற்குப்பிறகு ஏ டபிள்யூ மெல்லன் கல்வி, தர்மஸ்தாபனம் இத்திட்டத்தைப் பூர்த்தி செய்தது.

13வது முதல் 19வது நூற்றுண்டுவரையிலுமிருந்த சித்திரம், கட்டடக்கலை நிபுணர்களின் வேலைப் பொருள்களில் மெல்லன் சேகரித்தவை இக்கலைக்கூடத்தில் வைக்கப்பட்டுள்ள பொருள்களில்இருந்தன. வியாபாரியான ஸாமுவேல் எச். கிரஸ்தயாரித்த இத்தாலிய வர்ணச்சித்திரங்களும் கட்டடக் கலைப்பொருள்களிலிருந்து சேகரிக்கப்பட்டவையும் பாங்கரான செஸ்டர் டேலின் சேமிப்பிலிருந்து கிடைத்த அமெரிக்க வர்ணச் சித்திரங்களும் இக் கலைக் கூடத்தில் காட்சியில் வைக்கப்பட்டுள்ள முதல் பொருள்களாகும். அதற்குப்பிறகு அமெரிக்காவிலுள்ள பலர் நன்கொடையாக அளித்துள்ள அன்பளிப்புகள்மூலம் இந்தக் கலைக் கூடத்திலுள்ள கலைப் பொருள்களின் எண்ணிக்கை இருமடங்காக அதிகரித்துள்ளது.

காப்லி, ஸ்டூவர்ட், வெஸ்டு, இன்னஸ். ஸார்ஜெண்ட், மேரி கஸ்ஸாட், பெல்லோல் ஆகிய பிரபல அமெரிக்கக் கலைஞர்களின் பொருள்களும் பழங்கால அமெரிக்கச் சித்திரங்களில் சில முக்கியமானவையும் இப்பொழுது இக்கலைக் கூடத்தில் இருக்கின்றன. சுமார் 22,000 சித்திரங்களும் 'வாட்டர் கலர் படங்களும்கொண்ட 'அமெரிக்க டிஸைன்களின் குறிப்பு' என்பதை அமெரிக்க அரசாங்கம் இந்தக் கலைக்கூடத்துக்குவழங்கியுள்ளது. ஆரம்பகால காலனி ஆட்சிநாட்கள் முதல் 19வது சதாப்தக் கடைசி வரையிலும் அமெரிக்க டிஸைன்களுக்கும் வேலைப்பாட்டுக்கும் சித்திரஎடுத்துக்காட்டாக அரசாங்க ஆதரவில் இவை தயாரிக்கப்பட்டன.

பெயருக்கேற்பக் கலைக்கூடம் என்பது கலைக்காட்சிச் சாலைஎன்பதை விடகலைக்கு ஒருவிளக்கச் சாலையாகும். சாதாரணமாக ஒரு கலைக்கூடம் செய்யும் பணியைவிடப் பல நடவடிக்கைகளை இந்த ஸ்தாபனம் நடத்துகிறது. இலவசச் சொற்பொழிவுகள் அடங்கிய ஒரு திட்டத்தையும் கலைக்கூடத்தின் சுற்றுப் பிரயாணங்களையும் நடத்தும் கல்வி இலாகாவும் அங்கு இருக்கின்றது. 'கலைக்கூட சங்கீதநிகழ்ச்சிகள்' என்றபெயரில் நடத்தப்படும் இலவசநிகழ்ச்சிகள் தலைநகர சங்கீதவாழ்க்கையின் ஒரு முக்கியப்பிரிவாகும்.

15வது ஆண்டுவிழாவை இந்தக்கலைக்கூடம் நடத்துகையில்

(10ம் பக்கம் பார்க்க)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி வைகாசி - 25

## சேக்கிழார் திருநாள்

தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமான் சிவப்பேறு பெற்ற திருநாள் வைகாசிப் பூசநாளாகும். இவ்வாண்டு வைகாசிப் பூசம் 30உ செவ்வாய்க்கிழமை வருகிறது. சிவநெறிச் சார்புடையாரனைவரும் சிறப்புறக் கொண்டாட வேண்டிய இத்திருநாளை நேயர்களுக்கு நினைவூட்டுவதில் மகிழ்ச்சி கொள்ளுகிறோம்.

சைவத்திற்குப் பேரரணாக இருந்து மக்களின் மனவிருளை யகற்றி அகவொளியை உண்டாக்குவன திருமுறைகளும் மெய்கண்ட நூல்களுமாம். திருஞான சம்பந்தப் பெருமான் திருவாக்கில் தொடக்கமுறுகிற திருமுறை, சேக்கிழார் பெருமான் திருவாக்கில் நிறைவெய்துகிறது.

மந்திரங்களுக்குள் தலையாயது திருவைந்தெழுந்து, திருவைந்தெழுத்தின் உட்பொருளும் பிரணவத்தின் உட்பொருளும் ஒன்றே யென்று வேதாகமங்கள் கூறுகின்றன. ''பிரணவப் பொருளாம் பெருந்தகை' என்று ஆண்டவனை அதிவீரராம பாண்டியர் பாராட்டினர்.

பிரணவத்தின் பிரிவு நிலையை ''வியஷ்டி'' என்றும், சேர்க்கை நிலையைச் ''சமஷ்டி'' என்றும்

வடமொழியாளர்கூறுவர், ஈடெடுப்பில்லாத திருவைந்தெழுத்தாகிய ஒருமந்திரம் மட்டும் பிரணவமின்றியும் குறித்த பயனைத் தரவல்லது மற்றைமந்திரங்கள் பிரணவங் கூடினாலன்றிக் குறித்த பயனைத் தரமாட்டா என மந்திர நூல்கள் பேசுகின்றன.

இதனாலேயே மந்திரங்களின் ஆதியாகப் பிரணவம் பயிலப் பெற்றுவருகிறது. பிரணவத்தின் பொருள் ஆண்டவன் என்பது போலத் திருமுறைகளின் பொருளும் ஆண்டவனே என்பதை முதற்றிருமுறையின் முதற் பாடலும் பன்னிரண்டாம் திருமுறையின் இறுதிப்பாடலும் விளக்கிக் கொண்டிருக்கின்றன.

திருத்தொண்டர் புராணத்தை உலகெலாம் உய்ய வழங்கியருளிய சேக்கிழார் பெருமானுக்குத் தில்லைக்கூத்தன் வானிழல் வழியே கொடுத்த முதற்பொருள் 'உலகெலாமென்பது. 'கனக சபையார் முதலளிக்கச் சலைக்கன்னி நின்று ஏவல் கேட்க' என்பார் மகா வித்துவான் பிள்ளையவர்கள்.

"உலகெலாம்" என்ற சொல்லில் பிரணவம் அடங்கியிருப்பதை ஆன்றோர்கள் எடுத்துப் பாராட்டுவார்கள். ஞானசம்பந்தப் பெருந்தகையார், இறைவனுடைய திருச்செவியைச் சிறப்பித்து அவரது முதற்பாடலைத் "தோடுடைய" என்று தொடங்கி அச்சொல்லைப் பின்னர்ப் பல இடங்களில் தமது திருப்பதிகங் களிலே வைத்துள்ளார். தில்லைக் கூத்தனருளிய "உலகெலாம்" என்னும் சொல்லை முதலிலே வைத்துப் பாடல் தொடங்கிய சேக்கிழார் பெருமான் பின்னர்ப் பல இடங்களில் அச் சொல்லை வைத்திருப்பதோடு நூலிறுதியிலும் அமைத்து வைத்துள்ளார்.

ஞானசம்பந்தப் பெருமானால் ஓகாரத்தில் தொடங்கப் பெற்ற திருமுறை சேக்கிழார் பெருமானால் மகாரத்தில் முடிக்கப் பெற்றது. பிரணவப் பொருளாகிய பெருமானை எளிதிலே நாமடைய வழி காட்டிய சேக்கிழார் பெருமானைச் சிந்தைகொண்டு அவர் திருநாளில் ஒல்லும் வகைகளிளெல்லாம் வழிபாடாற்றி உய்தி பெறுவோமாக

(7ம் பக்கத்தொடர்ச்சி)

ஏற்பாடு செய்த பொருட்காட்சி. ஒரு மாபெரும் நிகழ்ச்சியாகும் ஸாமுவேல் எச் கிரஸ் தர்ம நிதி ஸ்தாபனம் கடனாக அளித்த 70சித்திரங்களையும் 24 கல் வடிவங்களையும் இந்த தர்ம ஸ்தாபனம் கலைக்கூடத்துக்குஅளித்த 13சித்திரங்களையும் பொது மக்கள்பார்க்கஇந்தப் பொருட்காட்சி சந்தர்ப்பமளித்துள்ளது. கிர்லான்டெய்யோ, டிஷியன், டின்டோரெட்டோ, வெர்னேனெஸ் ஆகியோர் தயாரித்துள்ளவை உள்பட இத்தாலியக்கலைகளைப் பொறுத்த பல அரிய பொருள்களும் இப் பொருட்காட்சியில் இடம்பெற்றன. டிஷியன் தயாரித்த மேல் தளச் சித்திரம் மிகவும் கவர்ச்சிகரமாக இருந்தது. வெனீஸுக்கு வெளியே இதைப் போன்ற சித்திரம் வேறுகிடையாது. அதைத் தயாரித்தவர் விரும்பியது போலவே அவர் தயாரித்துள்ள சித்திரத்தைத் தலைக்கு மேல் பார்க்கக் கலைக் கூடத்தில் ஒரு அறை தயாரிக்கப்பட்டுள்ளது.

சில ஆண்டுகளுக்குமுன் கிரஸ் தர்மஸ்தாபனத்துக்குக் கிடைத்துள்ள டிரைபவ வெண்கலப் பொருள்கள் வைக்கப்பட்டுள்ளது ஒரு பிரத்தியேகப் பகுதியாகும். சீர்திருத்தப் பதக்கங்கள், தட்டுகள் சிறு வெண்கலங்கள் முதலிய வேலைப்பாடுகள் அடங்கியமாபெரும்இரண்டு திரட்டுகளில் இது ஒன்றாகும்.

உலகின் மிகப்பெரியநகர்களில் ஒன்றாக வாஷிங்டன் இல்லாவிட்டாலும் இத்தேசிய கலைக்கூடத்துக்கு இதுவரையிலும் 220லட்சம் பார்வையாளர்கள் வந்துள்ளனர். இந்தக் கலைக்கூடம் ஒரு தேசீய ஸ்தாபனமென்றமுறையில்முக்கியத்துவம் பெற்றிருப்பதைத்தான் இது எடுத்துக் காட்டுகின்றது. ஒவ்வொரு ஆண்டும் கோடிக்கணக்கான அமெரிக்கர் நாட்டின் தலைநகருக்கு வருகின்றனர்; பார்க்க வேண்டியவற்றில் காங்கிரஸ் மாளிகைக்கும் ஜனதிபதிமாளிகைக்கும் அடுத்தபடியாகதேசிய கலைக்கூடம்தான் குறிப்பிடப்படுகிறது. அரசியல் நிபுணர்கள் கலைஅறிஞர்கள், உலகப் பிரசித்திபெற்ற கண்காட்சிச்சாலை அதிகாரிகள் உட்பட வெளிநாடுகளிலிருந்து வரும்பிரயாணிகளுக்குக் கலைக்கூடவிஜயம் ஒரு இன்றியமையாத நிகழ்ச்சியாகும்.

கலைக்கூடத்தின் தேசிய அந்தஸ்துக்கு ஒப்ப அதன் தர்ம

கர்த்தா குழுவில் அமெரிக்க முதல் நீதிமன்ற பிரதமநீதிபதி மந்திரிசபையைச் சேர்ந்த இரு அங்கத்தினர்கள் முதலிய பிரபலஸ்தர்கள் இருக்கின்றனர். இந்தக்கலைக்கூடத்தைநடத்துவதற்கு அமெரிக்கக் காங்கிரஸ் ஆண்டுதோறும் சுமார் 10 லட்சம் டாலர்கள் ஒதுக்குகின்றது;

இரண்டாவது உலகயுத்தம் நடைபெற்றபொழுது யுத்தப்பிரதேசங்களில் கலை, சரித்திரச் சான்றுகளைப் பராமரித்துப்பாதுகாப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட அமெரிக்க் கமிஷன் இந்த தேசீயக் கலைக்கூடத்தில் அதன் தலைமை அலுவலகத்தை ஏற்படுத்திக்கொண்டது. யுத்தம் நடைபெற்றபொழுது பாதுகாப்பதற்காகக் கொண்டுவரப்பட்ட விலைமிக்க பிரெஞ்சுக் கலைப் பொருள்கள் இங்குதான் பாதுகாப்பில் வைக்கப்பட்டன.

ஒருநாட்டின் மிகப்பெரியகலை ஏறக்குறைய அதன் தலைநகரத்தில்தான் இடம்பெறுகிறது என்றாலும் அமெரிக்காவில் அவ்வாறு இல்லை. இங்குள்ள பிரசித்திபெற்ற பெரும் கலைப் பொருள்கள் நியூயார்ச், பிலடெல்பியா, சிகாகோ, பாஸ்டன்முதலிய பல நகரங்களிலுள்ள கலைப் பொருட்சாலைகளுக்குத் தான் சொந்தமாக இருக்கின்றன. ஒரே இடத்தில் பொருள்களைச் சேர்த்துவைப்பது சாத்தியமானாலும் நாட்டின்பூகோள அமைப்புப்படி இங்கு இது விருப்பத்தகாதது ஆகும்

இந்த கலைக் கூடத்தைச் சேர்ந்த டேவிட் ஈ பின்லே ஓய்வுபெறுவதும் இவ்வாண்டில் தான் ஆன்ட்ரூ மெல்லன் இந்தக்கலைக்கூடத்தை ஏற்படுத்த மிஸ்டர் பின்லே உதவியளித்தார். 1938 முதல் அதன்டைரக்டராகவும் அவர் இருந்தார். 1938ல் கலைக்கூடத்தின் அதிகாரியாகப்பதவியேற்ற ஜான் வாக்கர்இப்பொழுதுபின்லேக்குக்குப்பிறகுடைரக்டர்பதவி ஏற்பார்

---

## தங்கம், வெள்ளி

| மதுரை | ஜூன் 7- | |
|---|---|---|
| பாட்லா | 104 | 6 0 |
| சவரன் | 68 | 8 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 | 0 0 |
| வெள்ளி 100தோலா | 178 | 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 0 |

# வானொலித்துறை அநீதி செய்கிறது.
# இராசா சர். கண்டனம்

மதுரை மே 31-

தமிழ்நாட்டில் தமிழர்களுக்கென்று ஏற்படுத்தப் பட்டுள்ள வானொலியில் தமிழுக்கு முதலிடம் கொடுக்கப்படவில்லை என்றும் கிளர்ச்சிசெய்வதன் மூலம் தான் தமிழ்மக்கள் தங்கள் உரிமையைப்பெறவேண்டும் என்றும் தமிழ்ச்சங்கப்பொன்விழா இசை அரங்கு இரண்டாம்நாள் நிகழ்ச்சிக்குத் தலைமைவகித்த டாக்டர் திரு இராசாசர் எம் எ முத்தையாசெட்டியார் குறிப்பிட்டார்.

சங்கீத கலாநிதி சித்தூர் சுப்பிரமணியபிள்ளை குழுவினரின் இன்னிசைவிருந்து இன்றுநடைபெற்றது. இசைக்குழுவினரைப் பாராட்டிப் பேசுகையிலேயே திரு முத்தையாசெட்டியார்மேற்கண்டவாறு கூறினார்.

மேலும் அவர் சொன்னார்: 'இந்திய வானொலி தமிழ் மக்களுக்குப் பெருத்த அநீதி செய்து வருகிறது. 75சதவிகிதம்தமிழ்ப் பாடல்கள் வெளியிட்டு வந்த வானொலியானது தற்சமயம் 25 சதவிகிதமே தமிழ்ப்பாடல்களை வெளியிடுகிறது. இதைஎதிர்த்து தமிழ்மக்கள் கிளர்ச்சி செய்ய வேண்டும். மக்கள் சபையிலுள்ள தமிழ்நாட்டுப் பிரதிநிதிகள் செய்தித்தகவல் அறிவிப்புத்துறை அமைச்சர் திரு கேசுகரிடம் தமிழர்களின் குறைகளை முறையாகத்தெரிவிப்பது கிடையாது. தவறான செய்திகளை அவர்களிடம் சொல்லுவதாலேயே இக்குழப்பம் ஏற்படுகிறது. தமிழ்மக்கள் தொடர்ந்து கிளர்ச்சிசெய்தால்தான் தமிழ் வளர்ச்சியடையும். தமிழிசை வேண்டும் என்பதற்காக ஏற்பட்ட கிளர்ச்சி தற்சமயம் குறைந்துவிட்டது. தமிழ்நாட்டிலேயே தமிழிசைக்காகக் கிளர்ச்சி நடத்துவது துர்ப்பாக்கியமானதாகும் இத்தகையநிலை இங்குதான் இருக்கிறதென்றார்.

## மின்சாரவெட்டு குறைகிறது

சென்னை ஜூன் 5-

சென்னை மாகாணத்தில் நீர் மின்சாரத் திட்டப் பகுதிகளில் இன்றியமையாத தேவைகள் நீங்கலாக பிறவற்றின் மீது விதிக்கப்பட்டிருந்த மின்சாரக்

குறைப்பு 50 சதவீதத்திலிருந்து 25சதவீதமாகக் குறைக்கப்படுகிறது, ஜூன் 7 வியாழன் முதல் இது நடைமுறைக்குவரும் நீர் நிலைமையில் சிறிது முன்னேற்றம் காணப்படுவதால் மின்சார வினியோக அளவு உயர்த்தப் படுகின்றது என்று அதிகார பூர்வமாகத் தெரியவருகின்றது.

மின்சாரக் குறைப்பு மே 21 முதல் 66 2/3 சதவீதமாகவும் ஜூன் 1முதல் 50 சதவீதமாகவும் இருந்துவருவது தெரிந்ததே.

---

## எஸ் எஸ் எல் சி பரீட்சை

சென்னை ஜூன் 5

சென்ற மார்ச்மாதத்தில் எஸ் எஸ் எல் ஸி பரீட்சைக்குச் சென்ற மாணவர்களில் 48 சதவீத மாணவர்களே தேர்ச்சி பெற்றுள்ளனர்.

தனியாகப் பரீட்சை எழுதியவர்கள்உள்பட 63,171 மாணவர்களில் 28,912 பேர் பல்கலைக் கழகப்படிப்புக்குத் தகுதியுள்ளவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

---

## உங்களுக்குத் தெரியுமா?

இந்தியாவில் 1954ல் மொத்தம் 2,39,168 அவுன்ஸ் தங்கம் உற்பத்தியாயிற்று. அதில் 2,20,522 அவுன்ஸ் தங்கம் மைசூர் தங்கச் சுரங்கங்களிலிருந்து கிடைத்ததாகும்.

சுமார் 3.65 கோடி ரூபாய் மதிப்புள்ள ஜவுளி ஆலை யந்திர சாதனங்கள் 1955-ல் இந்தியாவில் தயாரிக்கப்பட்டன.

இந்தியக் கப்பல்களில் 1954-55ல் மொத்தம்14,99,276 டன் சரக்குகள் ஏற்றிச் செல்லப்பட்டன; 1951-52ல் மொத்தம் 86,92,272டன் ஏற்றிச்செல்லப்பட்டன.

பாசன வேலைகளுக்காக மின்சார சக்தி உபயோகித்தவர்களின் எண்ணிக்கை 1950ல் 19,316 ஆகஇருந்தது 1954ல் 36,012ஆக அதிகரித்தது

பாரசேமிப்பு இயக்கத்தையும். சிறுசேமிப்பு இயக்கத்தையும் வளர்ப்பதற்காக இதுவரையில்மொத்தம் 161 க்ஷேம நல ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன; அவைகளில் சுமார் 600 ஊழியர்கள் பணியாற்றிவருகின்றனர்.

## படித்தோம்!

ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் வரலாறு:- தருமபுர ஆதீன வெளியீடு எண் 368. ஸ்ரீ ல ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் திருவருளாணையால் 30-5-56ல் நடைபெற்ற ஆதீனக் குருமுதல்வரின் குருபூசைவிழா மலராக வெளியிடப்பெற்றது. குருமுதல்வரின் வரலாற்று எழுத்தோவியம் முற்பகுதியிலும் சித்திர ஓவியம் பிற்பகுதியிலும் இடம் பெற்றுள்ளன. நல்ல தாளில் முப்பத்திரண்டு நிழற்படங்களில் குருமுதல்வரின் வரலாற்றை, அடிவிளக்கத்துடன் அழகுபெற வெளியிட்டுள்ளார்கள். சித்திர ஓவியங்களின் சிறப்பு, அளவிடமுடியாததாகும்.

சிவப்பிரகாச மூலமும் விளக்கப் பொழிப்பும்: திருநெல்வேலி சிவபூசைச்செல்வர் திருக்கூட்ட வெளியீடு. திருநெல்வேலியைச் சேர்ந்த திருமங்கைமாநகர் என்றபேட்டை ஸ்ரீ சுவாமி சர்க்கரை விநாயகர் கோயில் அறுபத்துமூவர் திருமடம் அறநிலையத் தலைவர் சிவத்திரு மெ. சு. ந. சுப்பையா மூப்பனார் அவர்களால், அவர்களது அறுபதாம் ஆண்டு நிறைவுவிழா நினைவாக வெளியிடப்பெற்றது; சைவ சித்தாந்த சரபம் ஈசான சிவாசாரிய சுவாமிகள், இலக்கணம் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள், உமாபதிசிவாசாரிய சுவாமிகள், சிவத்திரு மூப்பனாரவர்கள் ஆதியோரின் நிழற்படங்களுடனும் சிவஞானபோதச் சூத்திரங்களுடனும் வித்துவான் வே. மாணிக்கவாசகம்பிள்ளையவர்களால் எழுதப்பெற்ற விளக்கப்பொழிப்புரையுடனும் வெளிவந்துள்ள இச் சிவப்பிரகாசநூற்பிரதி திருபுசி புன்னைவனநாத முதலியார் 35 புலவாகம், பேட்டைரோடு, திருநெல்வேலி என்ற முகவரியாளரிடம் கிடைக்கும்.



இந்தியக்கலையில் புத்தர்

சென்னைப் பதிவுஎண் 2099 செட்டிநாடு

# சேக்கிழார் திருநாள் அழைப்பு.

பேரன்புடையீர்!

தில்லைக்கூத்தன் திருவருளால் நிகழும் துன்முகி வருஷம் வைகாசி மாதம் 28, 29, 30 (10, 11, 12-6-56)ஞாயிறு, திங்கள், செவ்வாய்க் கிழமைகளில் நகரச்சிவன் கோவிலுக்குமுன் முருக வேள்சதுக்கத்தில் அமைக்கப்பெற்றுள்ள விழாப்பந்தலில், திருப் பனந்தாள் ஸ்ரீகாசிமடம் இளவரசு வித்துவான் ஸ்ரீலஸ்ரீமகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்அவர்கள் தலைமையில், சேக்கிழார்திருநாள் கொண்டாடப் பெறும். 10-6-56ல் துறைசையாதீன வித்து வான், மதுரையாதீனச் சைவசித்தாந்தப் புலவர், சித்தாந்தச் சொல்மணி, செஞ்சொற்சிங்கம் திரு, வீரசிவம் அவர்கள், வித்து வான் மா. சிவகுருநாதபிள்ளை அவர்கள், செல்வி வயிநாகரம் இராம. மீனாட்சி, செல்வன் இராம. திருநாவுக்கரசு ஆகியோர் களும் 11-6-56ல் துறைசையாதீன மகாவித்துவான் சைவ சமய சண்டமாருதம் ஆறுமுகநாவலர் அவர்கள். சு. இராசேந்திரன், தமிழ்முடி ஆகியோர்களும், 12-6-56ல் பொம்மபுரஆதீன வித்து வான் மயிலம் கல்லூரி முதல்வர் சி. துரைசாமி ஐயரவர்கள், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர். சைவப்பேராசிரியர் ஜி. சுப்பிரமணியபிள்ளையவர்கள் சின்னமனூர் வித்துவான் க. சேதுராமலிங்கம் ஆகியோர்களும் பேசுவார்கள்.

12-6-56 முற்பகலில் சிவாலயத்தில் அறுபான் மும்மைநாயன் மார்களுக்கும், சேக்கிழார்பெருமானுக்கும் விசேடபூசை, வழிபாடு களும், இரவு சேக்கிழார் சுவாமிகளுடன் திருமுறை வீதியுலாவும் நடைபெறும். அன்பர்கள் திரளாகவந்து இன்புற வேண்டுகிறோம்.

அன்புள்ள

தேவகோட்டை
4-6-56 } **சேக்கிழார் திருநாட் கழகத்தார்**

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-35
துன்முகி-வைகாசி - 31
14-6-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## குறிஞ்சி

களவொழுக்கத்துத்தலைவன்சிறைப்புறத்தேவந்திருப்பதை யறிந்த தோழி, தலைவியின் இற்செறிப்பை அறிவுறுத்தித் தினையைநோக்கிக் கூறியது.

நெடுநீ ரருவிய கடும்பாட் டாங்கட், பிணிமுத லரைய பெருங்கல்
வாழைக், கொழுமுத லாய்கனி மந்தி கவரு, நன்மலை நாடனை நயவா
யாமவ, னளிபே ரன்பி னின்குர லோப்பி, நிற்புறங் காத்தலுங் காண்
போய் நீயென், றளிதேர் மேனித் தோல்கவி னழியப், பலிபெறு கடவுட்
பேணிக் கலிசிறந்து, தொடங்குநிலைப் பறவை யுடங்குகுரல் கவரும்
தோடிடங் கோடாய் கிளர்ந்து, நீடினை விளைமோ வாழிய தினையே 251

:மதுரைப் பெருமருதிள நாகனார்

தினையே! வாழ்க. நெடிய நீர்மையையுடைய அருவியினது ஒலி மிகுந்த அவ்விடத்தில் கட்டுண்ட அடியையுடைய பெரிய மலைவாழையினது கொழுத்த அழகிய பழத்தை மந்திகள் கவர்ந்துண்ணுகின்ற நல்லமலைநாடனை விரும்பி, யாம் அவனது அருள் மிக்க அன்பினால் நினது கதிர்களைப் பறவைகள் கொய்யாதபடி ஓப்பி நின்னைப் பாதுகாத்திருப்பதைக் கண்டிருக்கிறாய். தளிரனைய எனது உடம்பின் பழைய அழகு கெடும்படி அன்னை என்னை இற்செறித்துப் பலிபெறுகின்ற கடவுளை வழிபட்டு ஒலியெழுப்பி வெறியெடுக்கும் பொழுது காப்பில்லாமையால் பறவைகள் நினது கதிர்களைக் கொய்து செல்லும். ஆதலால் நினது கதிர்த்தோட்டினிடம் தலைசாயாது நிமிர்ந்து நின்று நெடுநாட்கழித்து விளைவாயாக

பாலகவி

# சேக்கிழார் பெருமான்

செல்வி வயினாகரம் இராம. மீனாட்சி

தேவகோட்டைச் சேக்கிழார் திருநாளில் 10-6-56ல் பேசியது.

சிவநெறிச் செல்வர்களே! செல்விகளே! வணக்கம். சான்றோர் உடைய தொண்டை நாட்டில் குன்றத்தூர்ப் பதியில் வேளாள குலத்தில் சேக்கிழார் மரபு செய்த தவத்தின் பயனாகச் செந்தமிழ்நாடு உய்ய அருண்மொழித்தேவர் தோன்றினார். அவரது உடன் பிறந்தவர் பாலறுவாயர் என்பார். மூத்தவராகிய அருண்மொழித் தேவர் தாம் தோன்றிய சேக்கிழார் மரபை விளக்கியமையால் அவருக்குச் சேக்கிழாரென்பதே பெயராக வழங்கத் தலைப்பட்டது. இளமையில் கற்பன கற்றுக் கல்வியாலுண்டாகும் போறிவும், அறிவின் பயனாகிய ஒழுக்கமும் உடையவராய் அவர் விளங்கினார்.

"அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்" என்ற முதுமொழிப்படி அந்நாளில் சோழ நாட்டையாண்ட அநபாயசோழ மன்னன் அருண்மொழித் தேவரை விரும்பியழைத்து அவருக்கு "உத்தமச் சோழப் பல்லவர்" என்னும் சிறப்புப் பெயர் கொடுத்துத் தனது முதலமைச்சராக ஆக்கிக் கொண்டான். சேக்கிழார் பெருமானுக்குச் சோழநாட்டில் தேவாரத் திருப்பதிகம் பெற்ற திருத்தலமாக விளங்குகின்ற திருநாகேச்சுரத்தில் அன்பு மிகுந்தபடியால் தமது குன்றத்தூரில் ஒரு சிவாலயம் கட்டுவித்து அதற்குத் 'திருநாகேச்சுரம்' எனப் பெயரிட்டு அங்கே நாள் வழிபாடு, சிறப்புவழிபாடுகளை முறையாக நிகழ்த்துவித்துச் சோழ நாட்டு அரசுரிமைச் செங்கோலை ஒழுங்குபெறச் செலுத்தி வந்தார்.

அந்நாளில் சைவ சமயிகளிற் சிலர் பாற்கடலிற் பிறந்த மீன்கள் அப்பாலை உண்ணாது வேறு பலவற்றை உண்ணுதல் போல மெய்நூல்களாகிய சைவ நூல்களைக் கல்லாது பரசமய

நூல்களைக் கற்றுத் தங்கள் வாணாளை வீணாளாகக் கழித்தார்கள். அந்த மயக்க உணர்ச்சி அரசனையும் விட்டபாடில்லை. மன்னவன் மாற்றுநெறியில் புகும்போது அவனைத் தடுத்து நன்னெறிப்படுத்துதல் மதியமைச்சரது கடமையாதலின் அவ்வாறே அருண்மொழித் தேவர் அரசனுக்கு அறிவுச் சுடர்கொளுத்தித் திருத் தொண்டர்களாகிய நாயன்மார்களது வரலாறுகளை விளங்களடுத்துக்கூறினார்.

திருவாரூர்ப் பூங்கோயிலில் புற்றிடங்கொண்டு எருந்தருளியிருக்கும் பெருமான் 'தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று அடியெடுத்துக்கொடுக்க அதைக் கொண்டு நம்பியாரூரர் திருத் தொண்டத் தொகை பாடியருளினர் என்பதனையும், அதனைத் தொகை நூலாகக் கொண்டு அதற்குத் திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் பொருளுணர்த்த உணர்ந்த நம்பியாண்டார் நம்பிகள் 'திருத் தொண்டர் திருவந்தாதி' என்னும் வகைநூலை அருளிச் செய்தார் என்பதனையும் சேக்கிழார் பெருமான் வாயிலாக அறிந்த சோழமன்னன் அவற்றின் விரி நூலாக ஒரு பெருங்காப்பியம் செய்துதர வேண்டுமென அவரிடம் வேண்டினான்.

அவனது வேண்டுகோளை ஏற்று அருண்மொழித் தேவர் சிதம்பரத் தலத்தை அடைந்து கனகசபைக்கு முன்சென்று ஐந்தொழிற்கூத்து ஆடும் அம்பலவாணரை வணங்கிப் 'பெருமானே! அடியேன் உமது மெய்த் தொண்டர்களாகிய உண்மை நாயன்மார்களது அடிமைத்திறத்தை விரித்துப் பாடுதற்கு அருள்புரிதல் வேண்டும்'' என்று வேண்டினர். சபா நாயகரது திருவருள் வானொலியாக எழுந்து 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்' என்ற தலைப்பை உலகறிய எடுத்துக் கொடுத்தது.

அருண்மொழித்தேவர் அந்தத் தலைப்பைமுதலாகக்கொண்டு ஆயிரக்கால் மண்டபத்திற் சென்றிருந்து அம்பலவாணரது திருவருளில் திளைத்து நின்று புராணம் பாடத் தொடங்கி அதற்குத் 'திருத்தொண்டர் புராணம்' எனப் பெயர் சூட்டி நிறைவுசெய்தார். நாள்தோறும் புராணநிறைவை எதிர்நோக்கி உசாவிக்கொண்டிருந்த சோழ

மன்னனுக்கு அது நிறைவெய்தியது என்னும் செய்தி மட்டற்ற மகிழ்ச்சியைத் தந்தது. புராண அரங்கேற்றம் நிகழுதல் வேண்டிச் சோழமன்னன் ஐம்பெருங் குழுவும் எண்பேராயமும் சூழத் தில்லைப் பதியை அடைந்தான். ஆலயமும் திருவீதிகளும் அணிசெய்யப் பெற்றன. தேவார திருவாசகங்களில் வல்ல பெரியோர்களும் சிவாகமவிற்பன்னர்களும் வேதவேதாங்க பண்டிதர்களும், இலக்கண, இலக்கிய, காப்பியப்புலவர்களும், பிறரும் திருத்தொண்டர்புராண அரங்கேற்றம் காணத் தில்லைப் பதிக்கு வந்தார்கள்.

சித்திரை மாதத்திருவாதிரை நட்சத்திரத்தில் தில்லைவாழந்தணருள் ஒருவர் சபாநாயகர் சன்னிதியில் அறுகாற் பீடமிட்டு, அதன்மேல் பட்டுவிரித்து. மலர் தூவித், தூபங்கொடுத்துத் திருத்தொண்டர் புராணத் திருமுறையை அதன்மேல் வைத்து, அருச்சித்து, வணங்கித் துதித்தார். சோழ மன்னன் வேண்டப் புராண அரங்கேற்றம்தொடங்கியது. நாள்தோறும் திருப்பாடல்களை முறையாகச் சொல்லிச் சேக்கிழார்பெருமான் பொருள் விரித்து வந்தார். அடுத்த ஆண்டுச் சித்திரை மாதத் திருவாதிரை நட்சத்திரத்தில் அரங்கேற்றம் நிறைவுற்றது.

புராணஅமைதியையும், சிறப்பையும் பிறவற்றையும் உளங்கொண்டுணர்ந்த சோழமன்னன் புராணத் திருமுறையைப் பசும் பட்டினுற் சுற்றிப் பொற்கலத்தில்வைத்து அதனையானைச் சிரசில் இருத்திச் சேக்கிழார் பெருமானையும் அந்தயானையின் மேல் ஏற்றித் தானும் கூட ஏறி இரண்டு கவரிகள் கொண்டு இரண்டு கைகளினாலும் வீசி 'இதுவன்றோ யான் செய்த தவப்பயன்' என்று கூறி நகர் வலம் செய்வித்தான். அப்போது மங்கல இசைக்கருவிகள் ஒலித்தன. அந்தணர் நான்மறைமுழக்கினர். அடியவர் 'அரஹர' ஓசை பெருக்கினர். ஊர் வலம் கோயில் திருமுன்றிலை அடைந்தது. சோழமன்னன் திருமுறையையும், சேக்கிழார் பெருமானையும் யானையிலிருந்து இறக்கி அருண்மொழித் தேவருக்குத் 'தொண்டர்சீர் பரவுவார்' என்னும் திருநாமம் கொடுத்து ஞானமுடிசூட்டி அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.




ராயவரம் திரு ப வ ராம குழந்தையன் செட்டியாரவர்கள் செல்வன் இராமநாதனுக்கும் பள்ளத்தூர் திரு அ மு மு வெள்ளையன் செட்டியாரவர்கள் செல்வி உமையாளுக்கும் 11-6-56ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. மணமக்கள் மக்களொடுமகிழ்ந்து மனையறங்காத்து நெடிதுவாழ ஆண்டவனை வேண்டுகிறோம்.




திருவுசாத்தானத் திருப்பதிகம்:- தருமபுர ஆதீனதெளியீடு எண் 366. ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் (20-5-56) மாத ஜன்ம நட்சத்திர நாளில் வெளியிடப்பெற்றது. வழக்கம்போல் ஆதீனத் தேவாரப்பாடசாலை ஆசிரியர் திரு ஆர் வேலாயுத ஓதுவாமூர்த்திகள் தலச்சிறப்பு உரை முதலியன எழுதியுள்ளார்கள்.

---

## நோட்டீஸ்

புதுக்கோட்டை டி- மு. கோர்ட்டு

O, P. 15 of 56

K. RM. RM. கிருஷ்ணப்பன்-1, லெட்சுமணன்-2, குஞ்சான் alias ராமநாதன் செட்டியார்-3 —மனுதார்கள்

G K ராமச்சந்திரய்யர்
—அட்வகேட்

இதனல் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில்:

ஷெகிம்பரில் வார்சு சர்ட்டிபிகேட் அபேட்சித்து மனுதார்களால் மனுக் கொடுக்கப்பட்டு 21-6-56உச்கு டயம் ஏற்பட்டிருக்கிறது. எவருக்கேனும் ஆட்சேபணை இருந்தால் அன்று ஆஜராகித் தெரிவித்துக் கொள்ள வேண்டியது

G K ராமச்சந்திரய்யர்

புதுக்கோட்டை 6-6-56 } மனுதார்கள் அட்வகேட்

# உங்களுக்குத் தெரியுமா?

கிழக்குப் பாக்கிஸ்தானிலிருந்து இடம் பெயர்ந்து வந்துள்ளவர்கள் குடியேறுவதற்கென்றே இந்திய சர்க்கார் 645 காலனிகளைக் கட்டியுள்ளனர். இக்காலனிகளில் 90 பயிற்சித் திட்டங்களையும், 41 நடுத்தரச் சிறுதொழில்களையும், குடிசைத் தொழில்களையும் ஆரம்பிப்பதற்கும் அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் தற்போது 36,000 ஆதாரப்பள்ளிக் கூடங்களும், 2,50.000 சாதாரண ஆரம்பப்பள்ளிக் கூடங்களும் உள்ளன.

சுமார் 4,83,555 ரூபாய்மதிப்புள்ள 3,20,816 பறவைகள் 1955-56ல் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன,

இந்தியாவில் ரப்பர் சாகுபடி. விஸ்தீர்ணம், 1954 டிசம்பர் மாதத்தில் மொத்தம் 1,76,647 ஏக்கராவாக இருந்தது, சென்ற வருஷஇறுதியில் 2,15,726 ஏக்காராவாக உயர்ந்துவிட்டது.

மத்திய சர்க்காருக்குச்சொந்தமான உணவுத் தானிய சேமிப்புக்கிடங்குகளில் மொத்தம் 2.1 லட்சம் டன் உணவுத் தானியங்களைச் சேமித்து வைப்பதற்கு இடவசதி உள்ளது.

பழங்குடியினர் வாழும் பிரதேசங்களில் ஷெட்யூல்ட் பிரதேசங்களில் மத்திய உள்விவகார மந்திராலயத்தின் திட்டமொன்றின்கீழ், மேற்கொள்ளப்படவிருக்கும், பல காரிய விசேஷ வேலைத்திட்டங்கள் ஒவ்வொன்றுக்கும் 27லட்சம் ரூபாய் வீதம் ஒதுக்கப்படும். இத்தொகையில் 12 லட்சம் ரூபாய் சமுதாய அபிவிருத்தித் திட்ட நிதிகளிலிருந்தும், பாக்கித் தொகை மத்திய உள்விவகார மந்திராலயத்திடமிருந்தும் கிடைக்கும்.

கிராம வீட்டுவசதித் திட்டங்களுக்காக, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்தம் 5கோடிரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

கால்நடைகளுக்கு வெக்கை நோயிலிருந்து பாதுகாப்பு அளிப்பதற்காக இந்தியக் கால்நடை வைத்திய ஆராய்ச்சிக்

கழகமும், இதர நிலையங்களும் வீர்யமுள்ள தடைமருந்துகளைத் தயாரித்துள்ளன. வெக்கை நோய் ஒழிப்புக்காக, மொத்தம் சுமார் 2.82கோடி ரூபாய் செலவில் ஐந்தாண்டுவேலைத் திட்டமொன்று மேற்கொள்ளப்படும்.

கிராம ரஸ்தா அபிவிருத்திக்கான கூட்டுறவு வேலைத்திட்டத்தின்கீழ், இந்திய சர்க்கார் இதுவரை மொத்தம் 1.168 ரஸ்தா அபிவிருத்தி வேலைகளுக்குஅனுமதியளித்துள்ளனர்.

இந்தியாவில் 1953ல் மொத்தம் சுமார் 4.47 கோடி பவுண்டு ரப்பர் உற்பத்தியாயிற்று. 1952ம் ஆண்டில் உற்பத்தியானது மொத்தம் 3.60 கோடி பவுண்டாகும்.

புனர்வாழ்விப்பு நிதி நிர்வாக ஸ்தாபனம், 1956 மார்ச் மாதம் வரை இடம் பெயர்ந்தவர்களுக்குக்கடனாக மொத்தம் 1,256.96 லட்சம் ரூபாய் வழங்கியுள்ளது. இத்தொகையில் 822.46 லட்சம் ரூபாய் மேற்குப் பாகிஸ்தானிலிருந்து இடம்பெயர்ந்து வந்தவர்களுக்கும், 434.50லட்சம் ரூபாய் கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து இடம்பெயர்ந்து வந்தவர்களுக்கும் வழங்கப்பட்டது.

இணைக்கப்பட்ட பயிற்சித் திட்டத்தின்கீழ்கூட்டுறவுமுறைகளில் பயிற்சியளிப்பதற்காக 1955-56ம் ஆண்டில் புதிதாக மொத்தம் பதினேழு பள்ளிக்கூடங்கள் திறந்து வைக்கப்பட்டன.

கிராம ரஸ்தா அபிவிருத்திக்கான கூட்டுறவுத் திட்டத்தின்கீழ் இந்திய சர்க்கார், ராஜ்ய சர்க்கார்களுக்குக் கடனாகமொத்தம் 6069 லட்சம்ரூபாய் வழங்கியுள்ளனர், இத்தொகையில் 46.53 லட்சம் ரூபாய் ஏற்கெனவே விநியோகிக்கப்பட்டுவிட்டது.

இந்தியா சென்ற வருஷத்தில் பர்மா, இலங்கை, ஈரான், மலேயா, நைஜீரியா, நேப்பாளம் சவூதி அரேபியா, தாய்லாந்து, அமெரிக்கா ஆகிய ஒன்பதுநாடுகளுக்கு மொத்தம் 60,650 ரூபாய் பெறுமானமுள்ள பாம்பு விஷக்கடி எதிர்ப்பு மருந்தை ஏற்றுமதி செய்துள்ளது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.